


*OFFERS*

# MICRON XIB

***Manufactured by MICROTECNICA, Europe's Largest Sound Projection Equipment producing Factory.***

**MICRON XIB is :—**

- ★ The Largest Projector Mechanism existing to-day.
- ★ Made in Europe's Best Equipped Research Laboratory.
- ★ 1,000 Machine Tools, 3 Big Plants.
- ★ Most Modern and Perfect Sound Projection Machine.
- ★ Magazines with internal illumination and Visual Scale.
- ★ Incorporated pre-amplifier.
- ★ Very rigid but quick tilting solid base.
- ★ High Intensity Arclamp (80-100 Amps.)
- ★ Built-in Exciter Lamp rectifier.
- ★ Built-in Driving Motor.
- ★ Independent Film take up motor for smooth and even Film take up.
- ★ Full automatic oiling of all the gears.
- ★ Film cooling by air blowing and water circulation.
- ★ Automatic Fire safety device, releases light Beam Shutter, Extinguishes the Arclamp, Stops the Motor and switches on the auditorium light.

## International Talkie Equipment Co., Ltd.,

**18, MOUNT ROAD,**

Phone : 86282 **MADRAS-2** Gram : 'SOUNDHEAD'

| **NEW YORK** | **BOMBAY** | **LONDON** |
|---|---|---|
| 20, Pine Street, NEW YORK 5, N.Y. | 17, Queens Road, BOMBAY 4. | 117, New Cavendish St., LONDON, W. 1. |

# Coiffures OF INDIA



வங்காளத்தில், ஒரு பழ
மையான — கொண்டை
அலங்காரம்.

புராதன கலாசாரம்—மறுபடியும் பழக்கத்திற்கு வந்துகொண்டிருக்கின்றன. மூதாட்டிகள் செய்து வந்த கொண்டை அலங்காரங்கள் வங்காளத்தில் மறு படியும் இன்றும் புத்துயிர் பெற்றிருக்கின்றன.

தற்காலத்திய கொண்டை அலங்காரங்கள் பெரும் பாலும் ஸ்வஸ்திக் வாசனைத் தைலம் உபயோகிக்கப் பட்டு செய்யப்படுகின்றன. கேச வளர்ச்சி அதிகமாக உத்தரவாதமளிப்பதுடன், புதுமையான லலிதத்தை யும், சுகந்த வாசனையும் அளிக்கிறது.

'ஸ்வஸ்திக்'கின் இதர உற்பத்திப் பொருள்களில், 'காந்தி' முதலிய வாசனை சோப்புகள். 'ஸ்வஸ்திக்' ஷேவிங் ஸ்டிக்கு, வாஷிங் சோப்பு. கோவலின் பிராண்டு வனஸ்பதி முதலியவை அடங்கி யுள்ளன.

# SWASTIK PERFUMED CASTOR OIL

UNMATCHED FOR QUALITY

**SWASTIK OIL MILLS LTD., BOMBAY.**

SOM. 1A SHILP

BE INDIAN – BUY INDIAN !



## அம்மா, உனக்குச் சகலமும் தெரிந்ததுதான்!

பூரண ஆரோக்கியமும் ஜொலிக்கும் கண்களுடன் கூடிய மலர்ந்த முகமும் ஏற்படுவதற்கு முக்கிய காரணம் குடல்கள் சரிவர வேலை செய்வதைப் பொறுத்துள்ளது. மலச்சிக்கல் ஏற்படாமல் குடல்கள் சரிவர வேலை செய்வதற்கு குழந்தைகள் விரும்பும் போனேமின்ட்தான் மிக எளிய சாதனம்.

சுலபமாக
மலமிளக்கும்
உன்னத சஞ்சீவி

**போனேமின்ட்**
லாக்ஸெடிவ் சூயிங் கம்

ரூ. 1—2—0, ரூ: 0—7—0 ஆகிய இரு சைஸ்களில் எங்கும் கிடைக்கும்

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜண்டுகள் :

ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி, 99-A, அரமனைக்காரத் தெரு, மதராஸ்

No. 3.

## இருமல்களுக்கும் ஜலதோஷங்களுக்கும்

மிக ஜனப்பிரீதி வாய்ந்த மருந்து







**உலகு பூராவும் உபயோகிக்கப்பட்டுவருவது**

நம் போன்றவர்களுக்கு ஏற்ற

முதல்தரமான ஸிகரட்

**நம்பர் டென்**

**வெர்ஜினியா**




# அவர்கள் ஆரோக்கியமாகவும் பலசாலிகளாகவும் வளரச் செய்யுங்கள்

இந்தியாவின் உணவுகள் முக்கியமாக தென்னிந்திய உணவுகள் போஷிப்பு சத்து குறைந்ததாக இருக்கிறதென்றும் அவைகளை குழந்தைகளுக்கு அளிப்பதால், குழந்தைகள் புஷ்டியுடன் வளர்வதில்லை என்றும் உணவு சத்துப் பொருள்களை ஆராய்ந்தறிந்த அறிஞர்கள் கூறுகிறார்கள்.



மெக்லெக் குழந்தைகளின் உணவு, மெக்லெக் சிரப் கால்விடல் ஆகிய இரண்டும் உணவுகளில் இருக்கும் குறைகளை சரிசெய்யும் உயர்ந்த சத்து நிறைந்தவைகள். மெக்லெக் குழந்தைகளின் உணவில் போஷணையளிக்கும் புரோடீனும், குளுகோஸ் காய்கறிச் சத்துப்பொருளும் இருக்கின்றன. மெக்லெக் சிரப் கால்விடல் என்பது, முக்கியமான விட்டமின்களும், உலோகசத்துக்களும் நிறைந்தது. குழந்தைகளுக்கு இப்படிப்பட்ட போஷிப்பு உணவுகளைக் கொடுத்தல் உங்கள் கடமையாகும். சீக்கிரமே குழந்தைகள் பலமும் ஆரோக்கியமும் பெற்றுவிடுகிறார்கள்.

உணவுக்குறைகளை சரிசெய்ய மெக்லெக் நியூட்ரிமெண்ட்ஸ் உபயோகமானவைகள் என்று போஷிப்புணவு நிபுணர்கள் கூறியுள்ளார்கள்.

மெக்லெக் நியூட்ரிமெண்ட்ஸ் சத்தும் சாரமும் நிறைந்த உணவே தவிர மருந்தோ அல்லது மருந்து வகைச் சரக்கோ அல்ல.

மெக்லெக் போஷிப்பு சத்துக்கள். உங்கள் உணவில் குறைபாய் உள்ள உணவுச்சத்துக்களை அளிப்பவை.

★

மெக்லெக் குழந்தைகளின் உணவு தேவையான புரோடீன் சத்தினை அளிக்கிறது.

சிரப் கால்விடால் தேவையான விட்டமின் உள்ள உணவு சத்தினை அளிக்கின்றது.



**மெக்லெக் நியூட்ரிமெண்ட்ஸ்**

உணவில் குறைபாடுள்ள உணவு சத்துக்களை அளிப்பவை.

விவரங்களுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதுங்கள்:

தி மெக்லெக் நியூட்ரிமெண்ட்ஸ் அண்ட் பார்மஸ்யூடிகல்ஸ் லிமிடெட்

99-A, ஆர்மீனியன் தெரு, ஜி. டி. மதராஸ்

MNP. 45 Tamil.

# டிடிடி யின் திறன் முழுதும்..

# நியோஸிடில் உள்ளது

**10% டி.டி.டி பௌடர்**

**இது கெய்கி தயாரிப்பு**

- ★ வாரக்கணக்கில் பூரண பலனளிப்பது
- ★ மெதுவாகவானாலும் நிச்சயம் கொல்லுவது
- ★ மிருகங்களுக்கு ஹானியற்றது

DDT Geigy DDT

நிலா வெளிச்சத்தில் அழகான பெரிய இந்திய ரோஜா மலர்கள் அவையின் மயக்கும் நறுமணத்தால் காற்றை நிரப்புகின்றன — அவை விநோலியா ஒயிட் ரோஸின் என்னென்ன எண்ணங்களை விளைவிக்கின்றன! உங்கள் அழகை அதிகரிக்கச் செய்ய உங்கள் இஷ்டத்திற்குரிய இச்சோப்பைவிட உத்தமமானதோ தகுதியானதோ வேறு இடையாது. மிருதுவான நுரையைத் தரும் விநோலியா மிகவும் மெல்லிய சருமத்தை சுகமாகச் சுத்தம் செய்கிறது . . . மேலும், மணமுள்ள அதன் நுரை உங்களைச் சுற்றிலும் மனோஹர பரிமளத்தைப் பரவச் செய்கிறது.




# விநோலியா ஒயிட் ரோஸ் சோப்

VWR. 11-63 TM

VINOLIA COMPANY LIMITED, LONDON, ENGLAND




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 49

# என்ன சேதி?

## அப்படிப் போடு!

மாஜி பிரதம மந்திரி ஸ்ரீ பிரகாசம் சமீபத்தில் திருப்பதிக்குப் போயிருந்த போது, அங்கே ஒரு பொதுக் கூட்டம் நடந்ததாம். அந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகித்த ஸ்ரீ அனந்தசயனம் என்ற மத்திய சட்டசபை அங்கத்தினர் சொல்லியிருக்கும் ஒரு விஷயம் ரொம்பத் தமாஷாக இருக்கிறது.

ஸ்ரீ அனந்தசயனம் சொல்லுகிறார் :—

“சென்னை நகரத்தைத் தமிழ் நாட்டுக்குத் தலைநகர மாக்கவேண்டும் என்று சொல்லுகிற தமிழ்த் தலைவர்கள் அந்த நகரத்துக்கு என்ன செய்திருக்கிறார்கள்? சைமன் கமிஷன் சென்னைக்கு வந்த போது, ஸ்ரீ பிரகாசம்தானே சென்னை நகரத்தினுடைய பெருமையைக் காப்பாற்றினார்? உப்புச் சத்தியாகிரகத்தின்போது கூட ஸ்ரீ பிரகாசம்தானே சென்னை நகரத்தின் கௌரவத்தை நிலைநாட்டினார்? ஆகவே, சென்னை நகரம் ஆந்திரர்களுக்குத்தான் சேர வேண்டும்!”

அப்படிப் போடடா, சொத்தைப் பூசணிக்காயை என்றானும் ஒருவன்!

சென்னை நகரத்துக்கு உரிமை கொண்டாடும் விஷயத்தில், ஆந்திரர்கள் எவ்வளவு சிறு குழந்தைத்தனமாக வாதாட முடியும் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

இந்தத் தேசத்திலே அந்நிய அரசாங்கத்தை எதிர்த்து ஒவ்வொரு மாகாணத்திலும் எத்தனையோ போராட்டங்கள் நடந்திருக்கின்றன. அவற்றில், ஒன்றிரண்டுக்குத் தலைமை வகித்துச் செல்லக்கூடிய சந்தர்ப்பம் — பாக்கியம் ஸ்ரீ பிரகாசத்துக்குக் கிடைத்தது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், ஸ்ரீ பிரகாசம் மேற்படி இயக்கங்களுக்குத் தலைமை வகித்து நடத்தியிராவிட்டால் அதற்காக அந்த இயக்கங்களே நின்று போயிருக்கும் என்ற முறையில் பேசுவது பெருந் தவறாகும். ஸ்ரீ பிரகாசத்துக்குப் பதில் வேறு யாராவது ஒரு சிவப் பிரகாசம் தலைமை வகித்து நடத்தியிருக்க முடியும். ஸ்ரீ பிரகாசம் மேற்படி இயக்கங்கள் மூலம் சென்னை நகரத்தின் பெருமையை உயர்த்தி விட்டார் என்று சொல்லுவதைக் காட்டிலும், தமக்குத்தான் பெருமையைத் தேடிக் கொண்டார் என்று சொல்லுவதுதான் ரொம்பப் பொருத்தமாகும்.

## கௌரவத்தைக் குலைத்தார்!

ஸ்ரீ அனந்தசயனம் சொல்லுவது போல, ஸ்ரீ பிரகாசம் சென்னை நகரத்தின் கௌரவத்தை முன்பு உயர்த்தி விட்டதாகவே வைத்துக் கொள்வோம். ஆனால், கடைசி காலத்தில் அவர் தம்முடைய மந்திரிப் பதவியை உடும்புபோல விடாமல் பிடித்துக் கொண்டிருந்ததன் மூலம் சென்னை நகரத்தின் கௌரவத்தை மாத்திரம் அல்ல, சென்னை மாகாணம் முழுவதினுடைய கௌரவத்தையுமே போக்கி, தேசம் முழுவதும் நம்மைப் பார்த்துப் பரிகாசம் செய்யும்படியான நிலைமையை ஏற்படுத்தி விட்டார் என்பதை யாராவது மறக்க முடியுமா? அதற்கு ஸ்ரீ அனந்தசயனம் சொல்லும் பதில் என்ன?

## கொண்டாடுக!

ஐக்கிய தேச மகா சபை என்ற ஸ்தாபனம் ஆரம்பமாகி ஏறக்குறைய இரண்டு ஆண்டுகளாகின்றன. உலகத்து நாடுகளெல்லாம் அதைக் கொண்டாடியிருக்கின்றன. மேற்படி ஸ்தாபனம் இதுவரை செய்திருக்கும் சேவையைப் பாராட்டி அமெரிக்கா, பிரான்ஸ், ருஷ்யா முதலிய தேசங்கள் பேசியிருக்கின்றன.

ட்ரூமன், ஆட்லி முதலிய பிரமுகர்கள் மேற்படி மகாசபை உலக சமாதானத்தை இனிமேல் ரொம்பப் பத்திரமாகப் பாதுகாக்குமென்று தாங்கள் நம்புவதாகச் சொல்லியிருக்கிறார்கள். நம்பட்டும், நன்றாக நம்பட்டும்!

மேற்படி செய்திக்குக் கீழே கீழ்க்கண்ட செய்தியும் தினசரிப் பத்திரிகைகளிலே வெளியாகியிருக்கிறது:

“புதுவிதமான ஒரு அணுகுண்டை அமெரிக்கா கண்டு பிடித்திருக்கிறது. இது முன்பு ஹிரோஷிமாவிலும் நாகசாகியிலும் வீசப்பட்ட அணுகுண்டுகளைக் காட்டிலும் பல மடங்கு அதிக சக்தி வாய்ந்தது. ஒரு குண்டு ஒரு பெரிய நகரத்தையே நாசமாக்கி விடும். எனவே, இன்னும் மூன்று வருஷ காலத்தில் உலகம் நாம் அடியோடு நிர்மூலமாவதை எதிர்பார்க்கலாம்.”

பேஷ்! அணுகுண்டைக் கண்டு பிடித்து ஏறக்குறைய இரண்டு வருஷங்களாகின்றன. ஆனால், இதை அமெரிக்கா ஏனோ இன்னும் கொண்டாடவில்லை? புதிதாக எதாவது ஓரிடத்தில் நாலு குண்டுகளைப் போட்டுக் கொண்டாடலாமே!

## தொண்டு வாழ்க!

ஒய். எம். ஐ. ஏ. காப்பி என்றால் சென்னையிலே வெகு பிரசித்தம்.

பொதுஜனங்களுக்கு நல்ல சிற்றுண்டி வழங்குவதிலே புகழ்பெற்ற இந்த ஸ்தாபனத்தை ஏற்படுத்திய பெருமை, காலஞ்சென்ற ஸ்ரீமதி அனிபெஸண்ட் அம்மையாரைச் சேர்ந்ததாகும்.

ஸ்ரீமதி அனிபெஸண்ட் தம்முடைய வாழ்நாளிலே இந்தியாவுக்காக எவ்வளவோ பாடுபட்டிருக்கிறார். ஆனால், ஒய். எம். ஐ. ஏ. காப்பியைச் சாப்பிட்டவர்களுக்கு ஸ்ரீமதி பெஸண்ட் செய்த மேற்படி தொண்டுகள் எல்லாவற்றையும் காட்டிலும் இந்த அருமையான காப்பித் தொண்டுதான் ரொம்ப முக்கியமானதாகத் தோனும். அவ்வளவு அருமையான காப்பி, சாப்பாடு, டிபன்!

மேற்படி ஒய். எம். ஐ. ஏ. ஸ்தாபனம் லாபத்தைக் கொஞ்சங்கூடப் பொருட்படுத்தாமல் சென்ற பல வருஷங்களாக சென்னை மாணவர்களுக்கு அருமையான தொண்டு செய்து வந்திருக்கிறது. தங்குவதற்கு இடம் கிடைக்காமலும் உண்ண நல்ல உணவு கிடைக்காமலும் எல்லோரும் கஷ்டப்படும் இந்தக் காலத்தில் கூட மாணவர்களுக்கு வசதியான இடமும் அருமையான உணவும் கொடுத்து வருகிறது. மாணவர்களுக்கு இன்னும் அதிகப்படியான ஹாஸ்டல் வசதி அளிப்பதற்காக அவர்கள் இப்போது மயிலாப்பூரில் வேறு ஒரு புதிய கட்டடம் கட்டத் தொடங்கியிருக்கிறார்கள். அதற்கு, சென்ற செவ்வாய்க் கிழமையன்று டாக்டர் சர் எஸ். ராதாகிருஷ்ணன் அஸ்திவாரக் கல் நாட்டியிருக்கிறார்.

ஸ்ரீமதி பெஸண்ட் மாணவர்களுக்குத் தொண்டு புரிவதையே தம்முடைய அந்திய கால லட்சியமாகக் கொண்டிருந்தார். ஒய். எம். ஐ. ஏ. இத்தகைய தொண்டுகளைச் செய்வதன் மூலம் ஸ்ரீமதி பெஸண்டின் லட்சியத்தைப் பூர்த்தி செய்யுமென்று கருதுகிறோம்.

---



கராச்சி “டெய்லி கெஜட்” பத்திரிகை ஆசிரியர் ஸ்ரீ எம். எஸ். எச். சர்மாவின் குமாரரும் கராச்சி ராய்ட்டர் நிருபருமான ஸ்ரீ எம் சுந்தரேசனுக்கும், புதுக்கோட்டை பாரத் பாங்க் மானேஜர் ஸ்ரீ வி. குருசாமியின் குமாரி ஸ்ரீமதி ஜி. சரஸ்வதிக்கும் புதுக்கோட்டையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

## "ஆண்டவனே, அருள் புரிக!"



லண்டன் தெய்வத்தினிடம் ஏதேச்சாதிகார வரம் கேட்பதற்காக சில இந்திய மன்னர்கள் இங்கிலாந்துக்கு விரைந்தோடி இருக்கிறார்கள்.

# கையில் ஜபமாலை....!

இந்தியாவிலுள்ள சுமார் முப்பத்தி நான்கு கோடி மக்களின் விதி ஒருவிதமாக நிர்ணயிக்கப்பட்டு விட்டது.

ஆனால், மீதியுள்ள ஆறு கோடி மக்களின் விதி என்ன?

இக்கேள்வி இப்போது நம் தலைவர்களின் மனதை ஆட்கொண்டிருக்கிறது.

அதாவது, பாகிஸ்தானிலுள்ள சுமார் இரண்டு கோடி ஹிந்துக்களின் கதி என்னவாகும் என்பது பற்றி இப்போது எதுவும் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை.

முஸ்லிம் லீக் தலைவர்கள் வாயளவில் கூறுவதை நாம் நம்புவதாயின், பாகிஸ்தானிலுள்ள சிறுபான்மையோரின் வாழ்க்கை எதிர்காலத்தில் இன்பமயமாகவே இருக்கும் என்று நினைத்துக் கொள்ளலாம்.

ஆனால், அவர்கள் சொல்லுவது போல் காரியங்கள் நடப்பதில்லை; அவர்கள் மனதில் நினைப்பதுபோலவே நடைபெறுகின்றன!

ஏனெனில், தாங்கள் சொல்லுவது போல் காரியங்கள் நடைபெறுவதைக் குறித்து அவர்கள் வருந்துவதில்லை. தாங்கள் சொல்லுவதற்கு நேர்மாறாக நடைபெறும் சம்பவங்களை அவர்கள் கண்டிப்பதும் இல்லை.

எனவே, அவர்கள் நினைப்பதுபோல் காரியங்கள் நடைபெறுகின்றன என்று ஊகிப்பதில் தவறு எதுவும் இல்லையல்லவா?

* * *

ஓட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்பது போல, மகாத்மா காந்தியுடன் சேர்ந்து ஜனாப் ஜின்னா வேண்டுகோள் விடுத்த பின்னர், பாஞ்சாலத்திலும் வங்காளத்திலும் கலவரங்கள் இரு மடங்கு அதிகமாகி விட்டன.

எல்லைப்புறத்திலும், அஸ்ஸாமிலும் 'சாத்வீக' சட்ட மறுப்பு இயக்கத்தை ஜனாப் ஜின்னா வாபஸ் செய்து கொண்ட பின்னர்தான், அப்பிரதேசங்களின் கொலைகளுடன் கொள்ளைகளும் அதிகமாகி விட்டனவாம்.

அது போலவே, "பாகிஸ்தானிலுள்ள சிறுபான்மையோர் கவலைப்பட வேண்டியதில்லை. அவர்களுக்கு எல்லா விஷயங்களிலும் நீதி வழங்கப்படும். அவர்களுடைய உரிமைகளுக்கு எவ்விதப் பாதகமும் ஏற்படாமல் பாதுகாப்பு அளிக்கப்படும்" என்றெல்லாம் ஜனாப் ஜின்னா கூறி சில நாட்கள் கூட ஆகவில்லை.

அவர் அவ்வாறு கூறிய பிறகுதான், பாகிஸ்தான் கோட்டையான சிந்துவில் சிறுபான்மையோர் மீது, குறிப்பாக ஹிந்துக்கள் மீது தொடரப்பட்டிருக்கும் அக்கிரமமான வகுப்புவாதப் போரின் உக்ரம் பன் மடங்கு அதிகமாகி இருக்கிறது.

* * *

உலகிலேயே நாகரிக அரசாங்கம் என்று சொல்லக் கூடிய எந்த தேசத்திலும் சிறுபான்மையோரின் நியாயமான உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிப்பதென்பது ஒரு தெய்வீகமான கடமையாகக் கருதப்பட்டு வருகின்றது.

ஆனால், பாகிஸ்தான் ராஜ்யத்திலோ வென்றால், அந்த ராஜ்யம் ஸ்தாபிதமாகு முன்பே சிறுபான்மையோரின் உரிமைகளை நசுக்குவது நிர்வாகச் சிறப்பு என்றும், மத பக்தி என்றும் கருதப்படுகின்றது போலும்!

எனினும், பாகிஸ்தானில் உலகிலேயே இராத இது போன்ற புதுமை நிகழ்வதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஏனெனில், பாகிஸ்தானே ஒரு புதுமைதானே!

ஆம், உலகிலுள்ள எந்த தேசத்தில் மதத்தை ஆதாரமாகக் கொண்டு அரசாங்கம் அமைக்கப்பட்டிருக்கிறது?

ஒரு தேசத்திலும் குறிப்பிட்ட மத சர்க்கார் என்பது இல்லவே இல்லை.

ஜனங்களின் ஜீவ உரிமைகளை ஆதாரமாகக் கொண்டுதான் சர்க்கார்கள் அமைக்கப்படுகின்றன.

ஒரு ஹிந்துவோ, முஸ்லிமோ, அல்லது வேறெந்த மதத்தையாவது சேர்ந்தவரோ அமெரிக்கப் பிரஜையாகி விட்டால். அவருக்கு அமெரிக்காவில் மற்ற அமெரிக்கர்களைப் போலவே எல்லா உரிமைகளும் உண்டு. அவரவர்களுடைய உரிமைகளைப் பெறுவதற்கு அவரவர்களின் மதம் எவ்விதத்திலும் தடையாக இருப்பதில்லை.

உலகிலுள்ள சகல நாகரிக சர்க்கார்களும் அவ்விதமேதான் நடந்து கொண்டு வருகின்றன.

முடியரசாயினும், குடியரசாயினும், ஜனநாயகமாயினும் அதனதன் கீழ் இருக்கும் பிரஜைகள் எல்லோருக்கும் — அவர்கள் எந்த மதத்தைச் சேர்ந்தவர்களாயினும் சம உரிமைகள் உண்டு.

ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சேர்ந்தவர் என்பதற்காகத் தங்களுடைய பிரஜைகளை நசுக்கும் விபரீதம் பாகிஸ்தானில் ஆரம்பமாகி இருப்பது மிகவும் வருந்தத்தக்க விஷயமாகும்.

இந்த லட்சணத்தில் லீக்கர்கள் சிறுபான்மையோருக்காகக் கண்ணீர் வடிக்கும் செப்பிடு வித்தையையும் கையாண்டு வருகிறார்கள்.

சிறுபான்மையோரான ஹிந்துக்கள் மீது போர் தொடுக்கும் லீக்கர்கள், சிறுபான்மையோரான தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு மாத்திரம் பாதுகாப்பு அளிப்பதாகக் கூறுவது அந்தரங்க சுத்தியற்ற வெறும் பகட்டுப் பேச்சு என்பதை யார்தான் அறிந்து கொள்ளாமல் இருக்க முடியும்?

• • •

சென்ற முப்பது வருஷங்களுக்கு முன் பிரிட்டிஷார் இந்தியாவில் வகுப்புவாரித் தொகுதிகளைச் சிருஷ்டித்ததால்தான், வகுப்புத் துவேஷம் நாளுக்கு நாள் முற்றி இப்போது பாகிஸ்தானில் வந்து முடிந்திருக்கிறது.

ஆனால். இப்போது முஸ்லிம் லீக்கர்கள் கையாண்டு வரும் முறைகளோ, பாகிஸ்தானிலும் இதர இடங்களிலும் கூட வகுப்பு வெறி இன்னும் அதிகமாகக் கொழுந்து விட்டெரியும்படி செய்வதாக இருக்கின்றன.

உதாரணமாக, எல்லைப்புற மாகாணத்தைப் பாருங்கள். அந்த மாகாணத்தில் பொதுஜன வோட்டு எடுக்கப்படப் போகிறதல்லவா?

அதற்கும் மதத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? அது முற்றிலும் அரசியல், பொருளாதாரப் பிரச்னையே யன்றி மத சம்பந்தமானது அல்ல.

அப்படி யிருந்தும்கூட, பாமரர்களான பட்டாணிய மக்களின் மனதில் குழப்பத்தை உண்டு பண்ணுவதற்காக, லீக்கர்கள் ஒரு கையில் குரானையும் மற்றொரு கையில் ஹிந்து விக்ரகத்தையும் வைத்துக் கொண்டு, ''இவ்விரண்டில் உங்களுக்கு எது வேண்டும்?'' என்று படுமோசமான பிரசாரம் செய்து வருகிறார்களாம்.

மற்றும் அது ஒரு மதப் போர் என்றும் அவர்கள் பிரசாரம் செய்து வருகிறார்கள்.

இதைக் காட்டிலும் கலப்பற்ற புளுகு வேறெதுவும் இருக்க முடியாது.

எல்லைப்புறத்தில் இப்போது ஆட்சி புரிவது முஸ்லிம்களே. எல்லை மாகாணம் இராணுவ ரீதியாக முக்கிய ஸ்தானம் வகிப்பதால். அதை யாரும் தனமாக உபயோகித்துக் கொள்ள தூய தலைவர்களான கான் அப்துல் கபார்கானையும் டாக்டர் கான் சாகிபையும் தலைவர்களாகக் கொண்ட பட்டாணியர்கள் விரும்பவில்லை. போதாக்குறைக்கு சர்ச்சிலுடனும் பிரிட்டிஷ் தளபதிகளுடனும் ஜின்னா அந்தரங்கத் தொடர்பு வைத்துக் கொண்டிருப்பது; பட்டாணியர் தலைவர்களின் சந்தேகத்தை உறுதிப்படுத்தி யிருக்கிறது.

இந்நிலைமையில் அவர்கள் பாகிஸ்தானைப் புறக்கணித்து விட்டுப் பட்டாணியஸ்தானை விரும்புவதில் தவறு என்ன?

முற்றிலும் அரசியல் காரணங்களை அடிப்படையாகக் கொண்ட இந்த விவகாரத்தில் மதத்தைக் கொண்டு வந்து புகுத்துவது காரியவாதிகளின் கொடிய சூழ்ச்சியல்லவா?

ஜின்னா விடுத்த நேர் நடவடிக்கை அறிக்கையால் ஏற்பட்ட அனர்த்தத்தைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிக அனர்த்தம், மதவெறியைத் தூண்டி விடும் மேற்படி துஷ்பிரசாரத்

தால் ஏற்படும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

* * *

இத்தகைய அனர்த்தத்துக்கு இடம் கொடுக்கக் கூடாது என்பதற்காகவே நமது அரும் பெரும் தலைவர்களில் ஒருவரும் இடைக்கால சர்க்காரின் கல்வி மந்திரியுமான மௌலானா அபுல் கலாம் ஆஸாத் சென்ற வாரம் ஓர் அறிக்கை விடுத்திருக்கிறார்:

“ஐக்கிய இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலும் உள்ள சிறுபான்மையோரின் உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் பிரகடனம் ஒன்றை, இரு அரசியல் நிர்ணய சபைகளையும் சேர்ந்த பிரதிநிதிகள் தயாரிக்க வேண்டும்.

“வகுப்பு வெறியால் ஏற்பட்ட பழைய சம்பவங்களை யெல்லாம் மறந்து, நம்முடைய முழு கவனத்தையும் ஜனங்களின் எதிர்கால க்ஷேமத்தை யொட்டிய காரியங்களில் செலுத்த வேண்டும்.

“சுதந்திரப் போரில் நாம் வெற்றி பெற்றுள்ள இச்சமயத்தில், அதன் பெருமையை வகுப்புத் துவேஷம் களங்கப்படுத்தி விருப்பது துரதிர்ஷ்டமாகும். எனினும், இந்தியாவில் ஒரு புது சகாப்தம் ஆரம்பமாகி யிருக்கிறது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

“ஐக்கிய இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலும் உள்ள சிறுபான்மையோர், தங்களுடைய எதிர்காலம் எவ்வாறு இருக்குமோ என்று நடுங்கிக்கொண்டிருக்கிறார்கள். எனவே, சிறுபான்மையோர் பிரச்னையை அமைதியாகவும் புத்திசாலித்தனமாகவும் தீர்க்க வேண்டியது நம்மெல்லோருடைய கடமையும் ஆகும்.

“மற்றும் சகல சமூகங்களும் பயமின்றியும், அமைதியாகவும் வாழ்ந்து முன்னேற்ற மடைவதற்கான நிர்வாக முறையை நிர்மாணிப்பதும் இப்போது நமது முழுமுதற் கடமை.”

மௌலானா அபுல் கலாம் ஆஸாதின் மேற்படி பொன்மொழிகள் முஸ்லிம் லீகர்களின் செவிகளில் ஏறினாலன்றி, எதிர்கால விளைவுகள் பயங்கரமாக இருக்கும் என்பது நிச்சயம்.

பாக்கிஸ்தான் உள்பட இந்தியாவின் எதிர்கால அமைதி, சிறுபான்மையோர் பிரச்னை திருப்திகரமாகத் தீருவதையே பொறுத்திருக்கிறது.

ஐக்கிய இந்தியா சம்பந்தப்பட்ட வரையில், மகாத்மா காந்தி, ராஷ்டிரபதி ஆச்சாரிய கிருபளானி முதலிய புருஷோத்தமர்கள் நிலைமையைத் தெளிவுபடுத்தி யிருக்கிறார்கள்.

“ஐக்கிய இந்தியாவில் முஸ்லிம்களாயினும் இதர சிறுபான்மையோராயினும் பயப்பட வேண்டிய அவசியமேயில்லை. சிறுபான்மையோர் சகலருக்கும் எல்லாவித நியாயமான உரிமைகளும் அளிக்கப்படும். காங்கிரஸ் ஒரு மகத்தான தேசிய ஸ்தாபனமாகும். எனவே, வகுப்புவாதத்தையோ அல்லது மதத்தையோ ஆதாரமாகக் கொண்டு விசேஷ சலுகைகள் காட்டப்படுவதையோ, அல்லது உரிமைகள் நசுக்கப்படுவதையோ காங்கிரஸ் சகித்துக் கொண்டு இராதென நான் உறுதி கூறுகிறேன். ஐக்கிய இந்தியாவிலுள்ள சகலருக்கும் சமமான உரிமைகளும் சந்தர்ப்பங்களும் அளிக்கப்படும். ஜாதி மத வகுப்பு வேற்றுமையின்றி எல்லோருக்கும் சமமாக நீதி வழங்கப்படும்.”

இவ்வாறாக ராஷ்டிரபதி ஆச்சாரிய கிருபளானி சிறுபான்மையோருக்கு வாக்குறுதி அளித்திருக்கிறார்.

மேற்படி வாக்குறுதி ஐக்கிய இந்தியாவிலுள்ள சிறுபான்மையோரான நான்கு கோடி முஸ்லிம்களுக்கும் நிச்சயமாக ஆறுதல் அளிக்கும் என்று நம்புகிறோம்.

ஆனால், பாக்கிஸ்தானிலுள்ள சிறுபான்மையோரின் நிலைமை என்ன?

சிந்துவிலும், வங்காளத்திலும், முஸ்லிம் லீக் அதிகாரத்தின் கீழுள்ள இந்திய சர்க்கார் இலாகாக்களிலும் காணும் காட்சிகள் பாக்கிஸ்தானிலுள்ள சிறுபான்மையோரை நடுநடுங்கும்படி செய்திருக்கின்றன.

எனவே, மௌலானா ஆஸாதின் வேண்டுகோள் நிறைவேறி, லீக் தலைவர்களின் சொல்லும் செயலும் ஒன்றாக இருக்கும் காலம் கூடிய சீக்கிரம் வருமா? அல்லது கையில் ஜபமாலையும் கக்கத்தில் கத்தியும் என்ற கொள்கை இனியும்கூட நீடிக்குமா?

# மந்திரசக்தி!

பாரதியார் என்ற பெயரில் ஏதோ ஒரு மந்திர சக்தி இருப்பதாகத் தோன்றுகிறது.

இரண்டு வருஷத்துக்கு முன்னால் பாரதி நிதி வசூல் ஆரம்பித்தபோது நாட்டில் பணப் புழக்கம் அதிகமாயிருந்தது. ஆயிரம் கோடி ரூபாய் பெறுமான நோட்டுக்கள் யாத்திரா மார்க்கத்தில் பிரயாணம் செய்து கொண்டிருந்தன. ஆயிரம் ரூபாய் நோட்டுக்களாகவே ஆயிரக் கணக்கில் செலாவணியில் இருந்தன. எனவே அந்தக் காலத்தில் பாரதி மண்டப நிதிக்குத் துரிதமாகப் பணம் சேர்ந்ததில் அதிசயம் ஒன்றுமில்லையென்று சொல்லலாம்.

ஆனால் இன்றைய நிலைமை அப்படியில்லை. நாட்டில் பணப் புழக்கம் குறைந்து விட்டது. வருமானம் சுருங்கி விட்டது. வியாபாரத் துறைகளும் சுருங்கிவிட்டன. உயிர் வாழ்வதற்கு அவசியமான பொருள்களோ முன்னைக் காட்டிலும் அதிக விலைக்கு விற்கின்றன.

இப்படிப்பட்ட காலத்திலும் பாரதியார் பெயரைச் சொன்னவுடனே பணம் வரத்தான் செய்கிறது! பெரிய தொகைகளும் வருகின்றன; சிறு தொகைகளும் வருகின்றன. எதிர்பாராத இடங்களிலிருந்தும் நன்கொடைகள் வருகின்றன!

உதாரணமாக, தர்மபுரம் ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பண்டார சந்நிதிகள், இந்தியா சுதந்திர மடையப் போகும் இந்தப் புண்ணிய வருஷத்திலுள்ள 365 தினங்களுக்கும் தினத்துக்கு ஒரு ரூபாய் வீதம் முந்நூற் றறுபத்தைந்து ரூபாய் பாரதி மண்டபத்துக்கு நன்கொடை அனுப்பி யிருக்கிறார்கள். பணம் அனுப்பியது மட்டுமா? பாரதி மண்டபத் திருப்பணிக்குத் தமது ஆசீர்வாதத்தையும் சேர்த்து அனுப்பி யிருக்கிறார்கள். மகா சந்நிதானத்தின் திருமுகம் பின்வருமாறு :—

“இந்திய மக்கள் உள்ளத்தில் நாட்டு உணர்ச்சியையும் தாய்மொழிப் பற்றையும் எளிதில் எழுப்பித் தழைக்கச் செய்த நாட்டுக் கவிகளில் தலை சிறந்தவர் பாரதியார். சமயம், ஆசாரம், சமுதாய ஒழுக்கம் இவைகளில் ஒத்த நோக்கும் அன்பும் கொண்டவர். இன்றைய நாட்டு மக்கள் விரும்பும் விடுதலைக்கு உழைத்த தமிழ்க் கவி முதல்வரும் இவரே.

இத்தகைய பெரும் புலவர் சுப்பிரமணிய பாரதியாரின் நினைவுக்கு அறிகுறியாக அமைக்கப் பெறும் மணி மண்டபக் கலைக் கோயில், பலரும் கூடிக் கலந்து உரையாடித் தத்தம் நிலைகளை முதன்மைப் படுத்தும் வகைக்குப் பெரிதும் உதவியாக நின்று விளங்குவதோடு, இப் பணியைத் தொடங்கிய கல்கி ஆசிரியருக்கும் ஆதரவு அளித்து வரும் அன்பர்கட்கும் ஆலவாய் அண்ணல் திருவருளால் என்றும் இன்பம் பெருகுவதாக.”

ஆதீன கர்த்தரின் ஆசிக்கு மிக்க வந்தனம். பாரதி மண்டபத் திருப்பணி பூர்த்தியாகித் திறப்பு விழாவும் விரைவில் நடந்தேறுமானால் அதைக் காட்டிலும் நாம் அடையக் கூடிய இன்பமோ, விரும்பும் இன்பமோ வேறு ஒன்றுமே யில்லை. அந்த இன்பம் ஸ்ரீலஸ்ரீ பண்டார சந்நிதிகளின் ஆசியினால் விரைவில் கிட்டுமாக.

* * *

இரண்டு வாரத்துக்கு முன்னால் ஒரு டெலிபோன் செய்தி வந்தது. “ஸ்ரீமதி கல்யாணி பத்மநாபன் 23உ காலை ரேடியோவில் பாடப் போகிறார்!” என்று அந்தச் செய்தி தெரிவித்தது.

“ரொம்ப சந்தோஷம். திவ்யமாய்ப் பாடட்டும். ஏன் பாடக் கூடாது? கல்யாணி அனந்தராமன், கல்யாணி கிருஷ்ணசாமி, கல்யாணி கோபாலசாமி, கல்யாணி அச்சுதராமன், கல்யாணி ராமச்சந்திரன் இப்படி எத்தனையோ கல்யாணிகள் ரேடியோவில் பாடும்போது கல்யாணி பத்மநாபன் மட்டும் ஏன் பாடக்கூடாது? பேஷாகப் பாடட்டும்! யாராவது தடை செய்தால் என்னிடம் சொல்லுங்கள். தடை செய்பவர்களை ஒரு கை பார்த்து விடுகிறேன்!” என்று கூறினேன்.

“அதற்காகச் சொல்லவில்லை. ஸ்ரீமதி கல்யாணி பத்மநாபனுக்கு ரேடியோ நிலையத்தில் கொடுக்கப் போகும் பணத்தைப் பாரதியார் நிதிக்குக் கொடுக்க உத்தேசித்திருக்கிறார்!” என்று டெலிபோனில் பேசியவர் சொன்னதும், “அப்படியா சமாசாரம்? பலே சபாஷ்!” என்றேன்.

குறிப்பிட்ட நேரத்தில் இன்னும் சில ரஸிகர்களையும் அழைத்து வைத்துக் கொண்டு எல்லாருமாக ஸ்ரீமதி கல்யாணி பத்மநாபனின் பாட்டைக் கேட்டோம். "பலே! சபாஷ்!" சொல்வதற்குத் தகுதியாகத்தான் பாட்டு இருந்தது. பாரதியார் பெயரைச் சொல்லி, அவரை நினைத்துக் கொண்டு, அவருடைய ஞாபகார்த்த நிதிக்காகப் பாடினால், பாட்டு பலே சபாஷாக இல்லாமல் வேறு எப்படி யிருக்கும்?

சொன்னது சொன்னபடியே மறுநாள் பணமும் வந்து சேர்ந்தது. முழுசாக முப்பது ரூபாய்! ரேடியோ நிலையத்தாரின் தரித்திர புத்தியை நினைத்துச் சிறிது கோபப்பட்டேன். அப்பேர்ப்பட்ட பாட்டுக்கு முப்பது ரூபாய்தானா கொடுக்கலாம்? சங்கராபரணத்தில் ஸ்பூர்த்த ஒரு சங்கதிக்கே முந்நூறு ரூபாய் கொடுக்கலாமே?

போனால் போகட்டும். இந்த ஜுலை, ஆகஸ்ட் இரண்டு மாதங்களிலும் ரேடியோவில் பாடுகிறவர்கள் எல்லாம் பாரதியாரைத் தியானித்துக் கொண்டு, பாரதி மண்டபத் திருப்பணியையும் நினைவில் வைத்துக் கொண்டு பாடட்டும். கச்சேரி பலே பேஷாக அமையாவிட்டால் என்னைக் கேட்கட்டும்.

* * *

கீழே வெளியாயிருக்கும் நன்கொடை ஜாபிதாவில் சில பிரமுகர்களின் பெயர்களைக் காணலாம். தமிழ் நாட்டில் இன்று சிறந்த தினப் பத்திரிகையாக விளங்கும் "தினமணி"யின் ஆசிரியர் ஸ்ரீ ஏ. என். சிவராமன் ரூபாய் நூறு அனுப்பி யிருக்கிறார். அரசியல் சாஸ்திர மேதாவியான ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் தமது நன்கொடையை அனுப்பியுள்ளார். திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ஏ. பி. ஸி. வீரபாகுவும், தூத்துக்குடி வர்த்தகப் பிரமுகர்களும் மனமுவந்து நன்கொடை அனுப்பி யிருக்கிறார்கள். ஸ்ரீ ஏ. பி. ஸி. வீரபாகுவுக்கும் சரி, மற்ற திருநெல்வேலிப் பிரமுகர்களுக்கும் சரி, நான் இப்போது நன்றி செலுத்தப் போவதில்லை. மண்டபத் திறப்பு விழா பூர்த்தியாகும் வரையில் திருநெல்வேலியாரின் இடைவிடா ஒத்துழைப்பும் தொடர்ந்த உதவியும் நமக்குத் தேவை. எனவே, அவர்களுக்குச் சொல்ல வேண்டிய நன்றியை யெல்லாம் சேர்த்துத் திறப்பு விழாவுக்குப் பிறகுதான் சொல்ல வேண்டும்.

## பாரதி மண்டப நிதி

ஸ்ரீலஸ்ரீ பண்டார சந்நிதி சுவாமிகள், தருமபுரம் ஆதீனம், தருமபுரம், மாயவரம் ரூ. 365—0—0

ஸ்ரீ ஏ. பி. ஸி. வீரபாகு பிள்ளை, பி. ஏ., திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர், தூத்துக்குடி ரூ. 101—0—0

ஸ்ரீ எம். வி. எஸ். சுந்தரவேல் நாடார், நகர காங்கிரஸ் கமிட்டித் தலைவர், தூத்துக்குடி ரூ. 100—0—0

ஸ்ரீ ஏ. எம். எஸ். கணேச நாடார், தூத்துக்குடி பஞ்சு வியாபாரச் சங்கத் தலைவர், தூத்துக்குடி ரூ. 100—0—0

ஸ்ரீ ஏ. என். சிவராமன், ஆசிரியர், "தினமணி", சென்னை ரூ. 100—0—0

ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாசாரி, மயிலாப்பூர், சென்னை ரூ. 100—0—0

ஸ்ரீ எஸ். சுப்பிரமணியச் செட்டியார், பஞ்சு வியாபாரம், தூத்துக்குடி ரூ. 50—0—0

ஸ்ரீ இ. ஆர். கோவிந்தன், ஆசிரியர், "ப்ரீ இந்தியா" சென்னை ரூ. 50—0—0

ஸ்ரீமதி கல்யாணி பத்மநாபன், "வாத்தினி", சேத்துப்பட்டு ரூ. 30—0—0

ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதி, சங்கீத வித்வான், தியாகராய நகர், சென்னை. ரூ. 15—0—0

ஸ்ரீமதி எஸ். லலிதா, (லல்லு) மயிலாப்பூர், சென்னை ரூ. 10—0—0

"பூஞ்சோலை" (கையெழுத்துப் பிரதி) பத்திரிகையின் மூலம் வசூல் ரூ. 70-க்கு விவரம்:

மீனாட்சி அழகப்பன், உ. சிறுவயல் ரூ. 10—0—0

நா. வெங்கடேசன், சென்னை 5—0—0

அழ. அருணாசலம், கொ. லட்சுமிபுரம் ரூ. 5—0—0

மு. இராம. கண்ணபிரான், ஓமலூர் ரூ. 5—0—0

டி. ஆர். பெருமாள் நாயுடு, திருச்சி ரூ. 5—0—0

வ. நரசிம்ம ராவ், சென்னை 5—0—0

எஸ். திருவேங்கடம் நாயுடு, சென்னை ரூ. 5—0—0

வி. ராஜகோபால், சென்னை ரூ. 5—0—0

ச. சிவராஜன், காரைக்கால் 5—0—0

மா. ஆறுமுகம், நாகர்கோவில் 5—0—0

ஸ்ரீ விஜயராகவன், சென்னை 5—0—0

வ. ரா. மைதிலி, சோளங்கிபுரம் ரூ. 5—0—0

அழ. மீனாட்சி, கொத்தமங்கலம் ரூ. 5—0—0

---

ஆக ரூ. 1091—0—0

முன் ஜாபிதாவின்படி ரூ. 1245—12—3

---

ஆக மொத்தம் ரூ. 2336—12—3

# லீலா சிட்னிஸ்

தினமும் லக்ஸ் டாய்லட் சோப்பினால் அழகுபடுத்திக்கொள்ளும் முறையை காண்பிக்கிறார்

லக்ஸ் டாய்லட் சோப்பின் நுரையை தாராளமாக சருமத்தின் மேல் தடவுகிறேன்..

சுத்தமான, குளிர்ந்த ஜலத்தில் கழுவுகிறேன்..

பின்பு, உலர்ந்த மிருதுவான துண்டினால் முகத்தை துடைக்கிறேன்

LUX TOILET SOAP

சினிமா நட்சத்திரங்கள் விரும்பும் அழகையளிக்கும் சோப்

வசீகரமான சருமம் ஒரு சினிமா நட்சத்திரத்திற்கு மிகவும் முக்கியமானது. நீங்களும் உங்களுடைய கட்டழகை மதித்தால் உங்களுக்கும் அது அவசியமே. இந்தியாவில்முன்னணியிலுள்ள சினிமா நட்சத்திரங்களின் அருமையான மேனியை காப்பாற்றும் இனிய பாதுகாப்பு முறையை ஏன் உங்கள் சருமத்திற்கு அளிக்கக்கூடாது? இந்த சுலபமான அழகு படுத்தும் முறையை நீங்களே 30 நாட்கள் கையாளுங்கள் — லக்ஸ் டாய்லட் சோப்பின் வெண்மையான சுகந்த நுரையை பிரயோகப்படுத்துங்கள். அது சருமத்தை குளுமையாகவும், மழமழப்பாகவும், சுத்தமாகவும் வைத்துக் கொள்ளுகிறது.

LTS. [illegible] TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# நாடார் மகாஜன மகாநாடு

★ ● ★

கோவில்பட்டி நகரம் சென்ற ஜூன் மாதம் 28உ திருவிழாக் கோலம் கொண்டு விளங்கிற்று. நாடார் மகாஜன சங்கத்தின் 18-வது மகாநாட்டை முன்னிட்டு நாடெங்கு மிருந்து நாடார் குலப் பிரமுகர்கள் வந்திருந்தார்கள். மகாநாட்டைத் திறந்து வைப்பதற்காக மதுவிலக்கு மந்திரி ஸ்ரீ டேனியல் தாமஸ் விஜயம் செய்திருந்தார்.

பதினெட்டு குதிரைகள் பூட்டிய சாரட்டில் மகாநாட்டுத் தலைவர்களை அமர்த்தி ஊர்வலம் நடத்தினார்கள். திரு அரி. அ. சு. துரைசாமி நாடார் அவர்களின் காம்பவுண்டில் அமைத்திருந்த பந்தலில் மகாநாடு விமரிசையாக நடைபெற்றது.

மகாநாட்டைத் திறந்து வைத்த ஸ்ரீ டேனியல் தாமஸ் அவர்கள், மதுவிலக்குத் திட்டத்தை வெற்றிகரமாக நடத்தி வைப்பதற்கு நாடார் சமூகத்தினர் பூரணமாக ஒத்துழைக்கவேண்டிய அவசியத்தை வற்புறுத்திப் பேசினார்.

"கிராமங்களில் நாடார் சமூகத்தினர் பலர் கள்ளிறக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். 1948-ம் ஆண்டு அக்டோபரில் திருநெல்வேலி ஜில்லாவில் மதுவிலக்கு அமுலுக்கு வரப் போகிறது. கள்ளிறக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளருக்கு வேறு தொழில்களை ஏற்படுத்திக் கொடுக்க இப்போதிருந்தே நாடார் குலப் பிரமுகர்கள் பிரயத்தனம் செய்ய வேண்டும். கள்ளுக்குப் பதிலாகப் பனை வெல்லம், பனங் கற்கண்டு முதலியவை தயார் செய்யவும், புதிய இயந்திர சாதனங்களைக் கொண்டு உலக மார்க்கெட்டில் விற்பனையாகக் கூடிய தின் பண்டங்கள் தயார் செய்யவும் முற்பட வேண்டும்" என்று மதுவிலக்கு மந்திரி அழகான தமிழில் விரிவாகப் பேசினார்.

மேற்படி மகாநாடு சம்பந்தமான சில புகைப்படக் காட்சிகளை அடுத்த பக்கங்களில் பார்க்கலாம்.

★ மதுவிலக்கு மந்திரி ஸ்ரீ டேனியல் தாமஸ், மகாநாட்டுத் தலைவர் ராவ் சாகிப் பெ. சி. செப்பா நாடார், நாடார் மகாஜன சங்கத் தலைவர் திரு வி. கனகசபை நாடார் ஆகியவர்கள் பதினெட்டு குதிரை பூட்டிய சாரட்டில் வீற்றிருக்கிறார்கள்.



★ மகாநாட்டுத் தலைவர்களின் ஊர்வலத்தின் போது ஒரு விதிக் காட்சி.

● ● ●

★ பதினெட்டாவது நாடார் மகாஜன சங்க மகாநாட்டிற்கு நாடார் குலப் பெண்மணிகள் பலரும் விஜயம் செய்திருந்தார்கள்.

● ● ●

★ மகாநாட்டைத் திறந்து வைத்து மதுவிலக்கு மந்திரி ஸ்ரீ டேனியல் தாமஸ் பேசினார். அவருடைய பிரசங்கம் பெரிதும் மதுவிலக்குப் பிரசங்கமாகவே அமைந்தது.



★ ★ ★

ஆயிரக்கணக்கான நாடார் குலப் பிரமுகர்கள் விஜயம் செய்து மகாநாட்டைச் சிறப்பித்தனர்.

★ ★ ★

# சகலமும் நானே!


இந்தாப்பா! ராவ்பஹதூர் கந்தசாமிப்பிள்ளை வீடு இது தானே? நான் அவரை பார்க்கணும்...
இப்படி உட்காருங்க, நான் போய் வரச்சொல்றேன்










என்னப்பா இது ராவ்பஹதூரைப் பார்க்கணும்னு அரை மணி நேரமாக காத்துக் கிட்டு இருக்கேன். என்னமோ வேஷம் போட்டுக் கொண்டு வந்து நிக்கிறியே?
நான் தானுங்க ராவ்பஹதூர்
ரெஸாக்

# இல்லாளாக இருப்பது விளையாட்டில்லை



வேலையாட்கள் முன்னேவிட இரட்டிப்பு சிலவாயும், காய்கறிகள் ஒன்றுக்கு மூன்று நான்குபங்கு அதிகவிலையுள்ளதாயும், பழங்கள் கிடைப்பது அரிதாயும், வண்ணான் சரிவர வராமலும் சமையல் வேலை செய்பவர்கள் சிலவை அதிகம் காட்டுவதிலேயே ஆசைகொண்டவர்களாயும் உள்ள இந்த நாட்களில் வாழ்க்கை ஒரே கவலை சித்திரமாக இருக்கின்றது. ஆயினும் இல்லாள் இவைகளை எல்லாம் ஒரு உற்சாகத்தோடு சமாளிக்க வேண்டும். அதற்கு அவளுக்கு அடிக்கடி போஷணையளிக்கும் டீ தேவையாய் இருக்கிறது. டீயைப்போல் சோர்வுற்ற நரம்புகளுக்கு பலமளித்து மனதிற்கு ஆயாசம் தீர்த்து வீட்டு அலுவல்களை சரிவர கவனிப்பதற்கு வேண்டிய பலமளிப்பது வேறு ஒன்றுமில்லை.

## நல்ல டீ தயாரிக்கும் முறை



1. உலை கெட்டியில் காய்ச்சாதே, டீபாட் உபயோகி.
2. டீபாட் சூடில்லாமலும் ஈரமில்லாமலும் இருக்கால் தான் உலர்ந்த டீ தூளைப் போட்டு கொதிநீரை விட்டதும் அது கஷாயம் சேர்ந்த மணத்தைத் தரும்.
3. ஒவ்வொரு கப் டீக்கும் ஒரு டீஸ்பூன் தூய டீ போட்டு அதிகப்படியாக டீ பாட்டிற்கு ஒரு ஸ்பூனும் போடவும்.
4. புதிதாக கொதிக்கவைத்த தண்ணீரையே உபயோகிக்கவும். ஒருபொழுதும் முன்னதாகவே கொதிக்க வைத்த ஜலத்தையோ, கொதிக்காத ஜலத்தையோ அல்லது நீண்ட நேரம் கொதிக்கவைத்த ஜலத்தையோ உபயோகிக்காதே. ஜலம் குமிழியுடன் கொதிக்கும் பொழுதுதான் அது கொதிப்பதற்கு அடையாளம்.
5. இந்த நிலையிலிருந்து ஐந்து நிமிஷம் ஊறவிட வேண்டும்.
6. டீ பாட்டில் இருக்கும்பொழுதே சர்க்கரையும் பாலும் சேர்க்காதே. கப்புகளில் ஊற்றியதை வடிகட்டிய பின் பாலும் சேர்க்கவும்.

டீ

எந்நேரமும் டீ நேரம்தான்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டால் வெளியிடப்பட்டது.

உத்தரவாதமுள்ள நகைகளுக்கு

VEECUMSEE Jewellers ESTD:- 1893
& DIAMOND MERCHANTS

(தலைமை ஆபீஸ்:—சைனு பஜார்—போன் 2072)

தியாகராயநகர் பிராஞ்சு:
"சாந்தி நிவாஸ்", (நாயர் ரோடு சமீபம்)
போன்: 88082

வேலை நேரம்: காலை 8 முதல் இரவு 8 வரை

## விலாஸம் மாறுதல்

தயவு செய்து கவனிக்கவும்

எங்களது புக்கிங் ஆபீஸ் தற்சமயம் நெ. 7, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு விலாஸத்தில் (மிட்லண்டு தியேட்டர் எதிரில்) அமைக்கப்பட்டிருக்கிறது

★

**சதர்ன் ரோட்வேஸ் லிமிடெட்**

டெலிபோன்: 86661

மானேஜிங் ஏஜண்டுகள்:

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் லிமிடெட்**

கைத்தறி ஆடைகளை
ஆதரியுங்கள்

மங்கையர் இன்றைய நாகரிகத்தில் விரும்பும் சாயத்திற்கு கியாரண்டியுள்ள எங்கள்

## "போட்டோ மார்க்"

# சேலைகளே

முதன்மை ஸ்தானம் பெற்றது



— தயாரிப்பவர்கள் —

## ஸ்ரீ சாரதா அண் கோ.,

நடேசர் சன்னதி, பழனி

(எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்)






வேம்பின் உன்னத சத்துக் கடங்கிய "கேரளா வேப் சோப்" உங்கள் சருமத்தைப் பாதுகாத்து மேனியைப் பிரகாசிக்கச் செய்கிறது. மேலும் வனப்புடன் மாசற்ற சருமத்தையும் தருகிறது. சருமத்தின் அதி ஆரோக்யத்திற்கான "சோப்" இதுவே.

*MANUFACTURERS :—*

**KERALA SOAP INSTITUTE**

...CALICUT...

PAS-KS-5

கேரளா சோப் இன்ஸ்டிட்யூட்
கள்ளிக்கோட்டை




# கம்பர் தரும் காட்சி

## 182. கொஞ்சம் தேற்றிப் பார்ப்போம்!

★

ராவணனுல் சிறகு அறுபட்டுக் கீழே விழுந்தபோது ஜடாயுவுக்கு ஒரே ஆற்றாமை — ராம லக்ஷ்மணர்களைப் பார்க்காமல் அல்லவா தன் உயிர் போகிறது என்பதாக.

மூர்ச்சித்து அறிவிழந்தவனுய்க் கிடக்கிறுன் ஜடாயு. ராமன் அவனைப் பார்க்க நேர்ந்தது. ஓடி வந்து ஜடாயுவின் உடல்மீது விழுந்தான். அது காரணமாகச் சிறிது நேரங் கழித்து மூர்ச்சை தெளிந்து அறிவும் வந்தது ஜடாயுவுக்கு.

ராமனைக் கண்டு கொண்டான். சந்தோஷமே வந்து விட்டது. பழியெல்லாம் தன்னை விட்டு நீங்கிவிட்டதாக ஒரு எக்களிப்பில் பேசினுன் ஜடாயு. மேலும் சொல்லுகிறுன்:

“நான் எவ்வளவு அதிர்ஷ்டசாலி, பாருங்கள்! ஒன்றுக்கும் உதவாத பழிச் சுமையாகிய என் உடம்பை எவ்வளவு நல்ல காரியத்தின் பொருட்டுத் துறக்கும்படியாகக் கிடைத்திருக்கிறது? உங்களைப் பார்க்கக் கிடைத்து விட்டதல்லவா எனக்கு! இங்கே வாருங்கள், கிட்ட வாருங்கள்!”

'பாக்கியத்தால், இன்றென்
பயனில் பழியாக்கை
போக்குகின்றேன்: கண்ணுற்றேன்,
புண்ணியரே வம்மின்' என்று,—
தாக்கி அரக்கன்
மகுடத் தலைதுமித்த
மூக்கினுல் உச்சி
முறைமுறையே மோக்கின்றுன்.

[கண்ணுற்றேன்: பார்த்துக் கொண்டேன் உங்களை; புண்ணியரே வம்மின் என்று: புண்ணியரே வாருங்கள் என்று சொல்லி; தாக்கி அரக்கன் மகுடத் தலைதுமித்த: அரக்கனது கிரீடந் தரித்த தலையைத் தாக்கிச் சிதற அடித்த; மூக்கினுல்: அத்தகைய வலிமை பொருந்திய மூக்கினுல்; உச்சி முறைமுறையே மோக்கின்றுன்: ராம லக்ஷ்மணர்களை ஒருவர் மாற்றி ஒருவராய்த் திரும்பத் திரும்ப உச்சி மோந்தான்.

குறிப்பு:—ஜடாயுவின் மூக்கு அபாரமான கடினம் கொண்டது. ஆனாலும் உச்சி மோப்பதில் எவ்வளவு இதம் காண்கிறது!]

• • •

ஜடாயு மிக்க ஆயாசத்தோடு மேலும் சொல்லுகிறுன்:

'வஞ்சனையால் வந்த
வரவென்ப(து), என்னுடைய
நெஞ்சமே முன்னே
நினைவித்த தானாலும்,
அஞ்சொல் மயிலை
அருந்ததியை நீங்கினிரோ,
எஞ்சலிலா ஆற்றல்
இருவிரும்' என்றுரைத்தான்.

[வஞ்சனையால் வந்த வரவு என்பது: ஏதோ வஞ்சனையால் நேர்ந்த காரியம் என்பதை; என்னுடைய நெஞ்சமே முன்னே நினைவித்தது: என்னுடைய மனம் முன்னமேயே எனக்கு ஒரு வகையாய் எடுத்துக் காட்டியது. ஆனாலும் விஷயம் எனக்குத் தெரியவில்லை; நீங்கினிரோ: சீதையைத் தனித்திருக்கும்படியாக விட்டுவிட்டு எங்கேயாவது அகன்றீர்களோ; எஞ்சலிலா ஆற்றல் இருவிரும்: யாருக்கும் அடங்காத சக்தி வாய்ந்த நீங்கள் இருவரும்.

குறிப்பு:—'அஞ்சொல் மயிலை அருந்ததியை' என்பதில் அருமை பாவம் நன்கு வெளியாகிறது; ஜடாயுவின் இதயம் பேசுகிற பேச்சு இது.]

"சீதையைத் தனித்திருக்கும்படியாகச் செய்துவிட்டீர்களோ?" என்று ஜடாயு கேட்டதற்கு லக்ஷ்மணன் பதில் சொல்லுகிறான்:

சந்தம்

தானன தானன
தான தன்னன

என்றவன் இயம்பலும்
இளைய கோமகன்
ஒன்றும்ஆண்(டு) உறுபொருள்
ஒழிவு றுவகை,
வன்றிறல் மாயமான்
வந்(து)அவ் ஆவிடை
நின்றதும் நிகழ்ந்ததும்
நிரப்பி னன்அரோ!

[என்றவன் இயம்பலும்: மேலே சொன்னபடி ஜடாயு கேட்கவும்; இளைய கோமகன்: லக்ஷ்மணன்; ஒன்றும் ஆண்டு உறு பொருள் ஒழிவுறுவகை: ஆங்கு நடந்த விஷயம் ஒன்றையும் விட்டுவிடாமல்; வன்றிறல் மாயமான் வந்து அவ் ஆவிடை நின்றதும்: அந்தப் பொல்லாத மாயமான் வந்து அங்கே நின்றதும், அதன்பின் நிகழ்ந்த காரியங்களையும்; நிரப்பினன் அரோ: சொல்லி முடித்தான்!]



போலீஸ்காரன் (கடிகாரம் திருடிய கைதியைப் பார்த்து):—என்னப்பா, கடிகாரமில்லாமல் இருப்பது உனக்கு அசௌகரியமாயிருக்குமே! ஒரு கடிகாரம் கொண்டு வந்து உன் அறையிலே மாட்டி வைக்கட்டுமா?

கைதி:—கடிகாரம் என்னத்துக்குங்க? ஒரு காலண்டர் இருந்தா, எடுத்துக்கிட்டு வந்து மாட்டி வையுங்க!

•˙•

லக்ஷ்மணன் எல்லா விஷயங்களையும் திறமையோடு எடுத்துச் சொன்னான். ஜடாயு மிக்க ஆதரவோடு கேட்டு விஷயத்தை மனதில் வாங்கிக் கொண்டான்.

ஆற்றலோன் அவ்வுரை
அறைய, ஆசையால்
ஏற்றுணர்(ந்து) எண்ணிஅவ்
எருவை வேந்தனும்,
மாற்றரும் துயர்அவர்
மனக்கொ ளாவகை,
தேற்றுதல் நன்றென
இனிய செப்புவான்.

[ஆற்றலோன் அவ்வுரை அறைய: பேசுந் திறமை வாய்ந்த அந்த லக்ஷ்மணன் அப்படிச் சொல்ல; ஆசையால் ஏற்றுணர்ந்து எண்ணி: மிக்க ஆர்வத்தோடு யோசனை செய்து மனதில் வாங்கி; அவ் எருவை வேந்தனும்: அந்த ஜடாயுவும்; மாற்றரும் துயர்: எந்த விதத்திலும் மாற்ற முடியாத மிகுந்த துயரம்; அவர் மனக் கொளாவகை: ராம லக்ஷ்மணர்கள் மனதில் ஏறி விடாதபடி — மனம் புண்பட்டுப் போகாதபடி; தேற்றுதல் நன்றென: தேற்றுதல் நல்லது என்று; இனிய செப்புவான்: பின் வருவனவற்றைச் சொல்லுகிறான்.]

ஜடாயு, ராம லக்ஷ்மணர்களுடைய உள்ளத்தோடு ஒட்டியவனாய் இருக்கிறான். "அடாடா! அவர்கள் மனம் எவ்வளவு புண்பட்டிருக்கும்" என்பதை எண்ணச் சகிக்க முடியவில்லை ஜடாயுவுக்கு.

மாற்ற முடியாத துயரம் அவர்களை அதிகமாக வருத்திவிடக் கூடாதே என்று பயந்தவனாய், 'தேறுதலான வார்த்தைகளைச் சொல்லிப் பார்ப்போம்' என்ற முறையில் பேசுகிறான். எப்படிப் பேசுகிறான் என்பதை அடுத்த இதழில் பார்க்கலாம்.

# டாக்டர்கள் வாழ்க!

ஸோமாஸ்

டாக்டர்கள் நோயாளிகளின் நோயைத் தீர்த்து வைப்பதனாலும், சில சமயம் நோயாளிகளையே தீர்த்து விடுவதனாலும் சிறந்த சமூக சேவகர்கள் என்று கொண்டாடப்படுகிறார்கள். பின் வரும் சிரஞ்சீவி விகடத் துணுக்குக்கூட அதைத் தான் குறிக்கிறது:

ஒரு நோயாளிக்கு ஒரு டாக்டர் மாதக் கணக்காக வைத்தியம் செய்து வந்தார். ஒருநாள் வழக்கம்போல் டாக்டர் நோயாளியின் வீட்டுக்குப் போனார். "இன்றைக்கு உடம்பு எப்படியிருக்கிறது? தலைவலி நின்று விட்டதா?" என்று அவர் விசாரித்தார்.

"தலைவலி நின்றிருக்கிறது. இன்றைக்கு உடம்பு அசதியெல்லாங்கூட தீர்ந்துவிட்டது போல் தோன்றுகிறது. ஆனால் மூச்சு விடுவது மாத்திரம் ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது!" என்றான் அவன்.

டாக்டர், "அப்படியா? நாளைக்கே அதையும் நிறுத்தி விடுகிறேன்!" என்றாராம்.

★

ஓர் ஊரில் இருந்த ஜனங்களுக்கு அடிக்கடி ஏதாவது வியாதிகள் வந்து கொண்டிருந்தன. சாதாரண வைத்தியர்களினால் ஒன்றும் முடியாமற் போகவே, அவ்வூர் பிரபல பிரமுகர் ஒருவர் வெளியூரிலிருந்து நல்ல டாக்டர் ஒருவரை அழைத்து வந்து அவ்வூரிலேயே அவர் எப்பொழுதும் வசிக்க வசதி செய்து தர வேண்டுமென்று தீர்மானித்தார்.

மிகவும் சிரமம் எடுத்துக் கொண்டு ஒரு டாக்டரை அழைத்து வந்து அவருக்குத் தம் வீட்டுக்கு எதிரிலேயே ஒரு பங்களா ஏற்பாடு செய்து கொடுத்தார். அவ்வளவுதான்; டாக்டருக்கு அந்த ஊரில் நல்ல வருமானம் வர ஆரம்பித்தது.



அந்த டாக்டர் முன்னிருந்த ஊரில், நோயாளிகள் யாரேனும் தம்மைத் தேடிக் கொண்டு வர மாட்டார்களா என்ற ஏக்கத்துடன் 'சூட்டும் பூட்டுமாகவும்' 'ஸ்டெதாஸ்கோப்பும் கையுமாகவும்' காத்திருந்ததில் அவருடைய உடம்புதான் கெட்டது.

ஆனால் இந்தப் புதிய இடத்துக்கு வந்ததிலிருந்து டாக்டருக்குத் தொந்தரவு அதிகமாகப் போய் விட்டது. ஆமாம், நோயாளிகள் ஓய்வு ஒழிவில்லாமல் வந்து குவிந்தால் அவர் என்ன செய்வார்?

காரணம், அந்த வைத்திய சாலைக்கு எதிரே ஒரு சாப்பாடு ஹோட்டல் இருந்ததுதான். அந்த டாக்டரை அந்த ஊருக்கு அழைத்து வந்த பிரமுகர்தான் அந்த ஹோட்டலின் சொந்தக்காரர்!

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு அந்த டாக்டரின் வருமானம் நாலைந்து மடங்கு அதிகமாயிற்று. ஏனென்றால், அந்த ஹோட்டலையும் அவரே வாங்கி நடத்த ஆரம்பித்து விட்டார்!

★

டாக்டர்கள் நோயைச் சொஸ்தப் படுத்தி மக்களுக்குச் சேவை செய்வதோடு இல்லாமல், இன்னும் எத்தனையோ விஷயங்களுக்கும் பெரிதும் உபகாரமாயிருக்கிறார்கள். ஆபீஸில் லீவு அத்தியாவசியமாயிருக்கும் சமயத்தில் நமக்கு வயிற்று வலியையோ, மண்டையிடியையோ வரவழைத்துத் தருவது டாக்டரை யன்றி வேறு யார்?

ஒரு நாள் ஒருவர் இரவு பன்னிரண்டு மணிக்கு ஒரு டாக்டர் வீட்டுக்குச் சென்று கதவை இடித்தார். டாக்டர் பரபரப்புடன் கதவைத் திறந்தார்.

"ரொம்ப அவசரம், டாக்டர் ஸார்! என்னோடு உடனே புறப்பட்டு வர வேண்டும்!" என்றான் வந்த ஆசாமி பரபரப்புடன்.

டாக்டர் அவரது பரிதாபத் தோற்றத்



தையும் பரபரப்பையும் கண்டு 'கேஸ்' கொஞ்சம் கவலைக் கிடமானது என்று நினைத்துக் கொண்டார். உடனே அவசர அவசரமாக உடைகளை அணிந்து கொண்டு காரில் அவரையும் ஏற்றிக்கொண்டு காற்றாய்ப் பறந்தார்.

கார் ஒரு சில நிமிஷத்தில் அந்த அவசரக்காரரின் வீட்டை அடைந்தது. அவர் வீடு இறங்கியதும் டாக்டர் மிகவும் பரபரப்புடன் கைப்பெட்டியை எடுத்துக் கொண்டு இறங்கினார்.

அவர் இறங்கினதும் இறங்காததுமாக அந்த ஆசாமி, "டாக்டர் ஸார்! உங்களுக்கு 'விஸிடிங் பீஸ்' எவ்வளவு?" என்று கேட்டான்.

"ஏன், இரண்டு ரூபாய்! அதைப்பற்றி இப்போது என்ன அவசரம்? நோயாளியை முதலில் பார்ப்போமே!" என்றார் டாக்டர்.

"டாக்டர் ஸார், கோபித்துக் கொள்ளக் கூடாது! உண்மையில் என் வீட்டில் நோயாளி யாரும் இல்லை. நான் ஸினிமாவுக்குப் போயிருந்தேன். ஸினிமா முடிந்ததும் பஸ்ஸுக்கு நேரமாகி விட்டபடியால் ஒரு 'டாக்ஸி'யைக் கூப்பிட்டேன். அவன் ஆறு ரூபாய் கேட்டான். என்னிடம் அவ்வளவு பணம் இல்லை யாகையால் உங்களைத் தொந்தரவு செய்யவேண்டி வந்தது. இந்தாருங்கள், உங்கள் விஸிட்டிங் பீஸ்! உங்களுக்கு ரொம்ப தாங்க்ஸ்!" என்று கூறி அந்த ஆசாமி இரண்டு ரூபாயைக் கொடுத்தார்!

*

ஒரு பிரசித்தி பெற்ற டாக்டரிடம் காலையில் 'க்யூ' வரிசையில் நோயாளிகள் வந்து காத்திருந்தனர். அவர்களுள் ஒரு யுவதி அதிகாலையி லிருந்தே டாக்டருக்காகக் காத்திருந்தாள். டாக்டர் எல்லா நோயாளிகளையும் கவனித்து 'ப்ரிஸ்க்ருப்ஷன்' எழுதிக் கொடுத்து ஒரு வழியாய் அனுப்பினார். அந்த யுவதி மாத்திரம் மிகவும் சாவதானமாய் ஒரு மூலையில் காத்துக் கொண்டிருந்தாள்.

டாக்டருக்கு அவளைப் பார்த்ததும் ஆச்சரியமாய்ப் போய் விட்டது.

"என்ன அம்மா, உங்களுக்கு என்ன வேண்டும்? வெகு நாழிகையாகக் காத்துக் கொண்டிருக்கிறீர்களே! நீங்கள் முன்னாலேயே உள்ளே வந்திருக்கலாமே!" என்று அன்பு ததும்பப் பேசிக் கொண்டே டாக்டர் அந்த யுவதியிடம் வந்து, "உங்களுக்கு உடம்புக்கு என்ன?" என்று கேட்டுவிட்டு 'ஸ்டெதாஸ்கோப்'பை எடுத்துக் காதில் மாட்டிக் கொண்டார்.

உடனே அந்த யுவதி நாணத்துடன் தலையைக் குனிந்து கொண்டு, "என் உடம்புக்கு ஒன்றுமில்லை... வந்து... இந்தக் கடிதம்......" என்று கூறி மேலே பேச முடியாமல் தன் கையிலிருந்த ஒரு கடிதத்தை நீட்டினாள்.

டாக்டர் கடிதத்தைக் கையில் வாங்கிப் பார்த்து, "இது என்ன, 'கருணா' என்றல்லவா விலாசமிட்டிருக்கிறது? உங்களுக்கு வந்த கடிதமா?" என்று இழுத்தாற் போல் கேட்டார்.

"ஆமாம், என் பெயர்தான் கருணா!"

"உங்களுக்கு வந்த கடிதத்தை என்னிடம் கொடுக்கிறீர்களே! எதற்காக?" என்று டாக்டர் திகைப்பும் குழப்பமும் கலந்த குரலில் கேட்டார்.

"தயவு செய்து அந்தக் கடிதத்தைப் படிக்க வேண்டும்......!"

உடனே டாக்டரின் முகத்தில் சிறிது கோபக் குறி தோன்றியது. "என்ன அம்மா, எனக்கு வேறு வேலை இல்லையென்று நினைத்தீர்களா?" என்றார்.

"தயவு செய்து மன்னிக்க வேண்டும்; இந்தக் கடிதத்தை யாரிடமும் கொடுத்துப் படிக்கச் சொல்லுவதற்கில்லை. வெளியிலிருந்து என் கணவர் எழுதிய கடிதம் இது. அவரும் ஒரு டாக்டர். அவர் எழுத்தை யாரும் படிக்க முடியாது. அதனால்தான் உங்களுக்குச் சிரமம் தருகிறேன்!" என்றாள் அந்த யுவதி.

இப்படியே டாக்டரைப் பற்றி எவ்வளவோ எழுதிக்கொண்டு போகலாம். ஆனால் அவற்றைப் படிக்கும் நீங்கள் உடனே ஒரு டாக்டரின் உதவியை நாடும்படி யாகிவிட்டால் என்ன செய்வது? ஆகவே இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்!

"... வேணுமென்றுதானே சொல்றேள்? என் பேர் 'தேவகி' என்று சொன்னதற்குப் போட்டியாக உங்கள் பேர் தேவன் என்கிறேள்......!"

## என். சுப்பிரமணியன்

பார்க்க வந்திருந்த வாசுதேவன் மட்டும் "தேவகி!" என்றான் உணர்ச்சியுடன்.

வழக்கமாகத் தேவகியின் படிப் பில் அதனை பாட்டுதான் இருந் ததே ஒழிய, பேச்சே கிடையாது. அன்று மட்டும் அவன் அப்படித் தவறிப் பேச நேர்ந்து விட்டது என்றால், அதற்குக் காரணம் சாதாரணமானதா யிருக்க முடி யுமா? வெகு அடக்கமான பெண், பலர் முன்னிலையில் வாசுதேவனை "தாங்கள!" என்று அழைப்பது முறையில்லாத காரியம்தான். ஆனால், அவன் உள்ளத்தில் பெருக் கெடுத்த உணர்ச்சி அதற்கு இடம் கொடுக்க வில்லை.

ஆகவே, "அடக் கம் போதாது, பெண் ணிற்கு!"



னதைக் குளிர வைக்கவில்லை. அவர்கள் செய்யும் காரியங்களில் இருந்த மௌனத்தை அவனால் பொறுக்க முடியவில்லை. அன்று மாலை வேளையில் ஆற்றங்கரைப் பக்கம் போகலாம் என்று கிளம்பினான். சாலையில் ஒவ்வொரு அடிக்கும் ஒரு புழுதிப்படலம் எழும்பிற்று. இரண்டு புறமும் இருந்த மூங்கில் வேலி பார்ப்பதற்குச் சகிக்க முடிய வில்லை. சாலை நடுவில்தான் புழுதி கிளம்புகிறது, ஓரமாகப் போகலாமென்று வேலியோரம் நெருங்கியவனைச் சுர் என்று ஒரு முள் விலாவைப் போரும்படி எச்சரிக்கை செய்தது. கிராம வாழ்க்கையின் மனோகரத்தைப் பற்றிப் பேசிய ஒருவரும் அந்த நிமிஷத்தில் அவன் முன்னால் நல்ல வேளையாக இல்லை. இருந்திருந்தால் நிச்சயமாக அவன் தான் கெட்டியாக மூடிக் கொண்டிருந்த முஷ்டியை அவர்கள்மேல் தயங்காமல் பிரயோகம் செய்திருப்பான்!

தெருவின் மூலையிலிருந்த பிள்ளையார் கோவிலுக்கு எதிரே திரும்பி வரும்பொழுது சற்று நின்றான் அவன். தன்னை வேறு எங்கேயாவது கொண்டு போய்ச் சேர்க்கும்படி அந்தப் பிள்ளையாருக்கு ஒரு வேண்டுகோள் விடலாமா என்று சிறிது நேரம் யோசித்தான். ஆனால் அடுத்த நிமிஷமே அந்தச் செவிட்டுப் பிள்ளையாரிடம் எந்தவிதமான தகவலையும் சுலபமாகச் சொல்லிக் குறை தீர்த்துக் கொள்வதற்கில்லை என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது. சளசளவென்று பேசும் பாட்டிகளிடையே இருக்கும் அந்தப் பிள்ளையார் இவ்வளவு காலக்குள் செவிடாகி இருக்கவேண்டும். அப்படி முழுச் செவிடாக ஆகாமல் தப்பியிருந்தாலும், இதோ இந்த அர்ச்சகர் அடிக்கும் மணிக்குத் தப்பியிருக்க முடியாது. இந்த முடிவுகளுடன் வாசுதேவன் திரும்பினான்.

இன்னொரு விஷயமும் வாசுதேவனுக்கு இடைஞ்சலாக இருந்தது. மாலை ஆறு மணிக்கே அடங்கிவிடும் பஜாரைக் காலை நான்கு மணிக்கே கிளம்பிவிடுவதை அவன் ஆதரிக்கவில்லை. காலை எட்டு மணிக்கு முதலில் சுர் என்று அடிக்கும் வெய்யிலை வெகு லட்சணமாக ரசித்த அந்த அவனுக்கு அதிகாலையின் மங்கிய வெளிச்சத்தில் நட்சத்திரங்களின் அழகைப் பார்க்கத் துளிக்கூடப் பிடிக்கவில்லை. மூன்றாவது திண்ணையில் "நாராயண், நாராயண்!" என்று ஓவென்று அந்த வேளையில் கத்தும் பிராமணரை, 'பளார், பளார்!' என்று அறைந்தால் கூடக் குற்றமில்லை என்று பட்டது அவனுக்கு. தினந்தோறும் தன் திண்ணையில் சளசளவென்று ஜலம் தெளிக்கும் அடுத்த வீட்டுப் பெண், அந்தப் பிராமணன் தலையிலும் ஒர் இரண்டு செம்பு ஜலத்தைக் கொட்டக் கூடாது என்று அவன் எண்ணினான்.

இவ்வளவு நல்ல எண்ணங்களுடனும், அரைத் தூக்கத்துடனும் இரண்டு நாட்களாக எழுந்திருக்கும் அவனைத் தபால்காரனும் தன்னாலும் சந்தோஷப்படுத்த எடுத்துக் கொண்ட முயற்சிகள் எல்லாம் விழலுக்கிறைத்த நீராயிற்று. "எல்லாம் பத்து நாள் பழகினக்கன்னா சரியாப் போயிடும், சாமி!" என்று அவர்கள் கூறியது அவன் எரிச்சலைத்தான் கிளறிவிட்டது.

ஆனால், மூன்றாவது நாள் அவன் சோர்வைப் பறக்க அடிக்கும் காரியம் ஒன்று நடக்கத்தான் செய்தது. காலையில் வழக்கம் போல் பிரம்புப் பாயில் கள்ளிப் பெட்டிக்கு எதிரே அவன் அசதியுடன் உட்கார்ந்திருந்தான். கீழே ஒரு மேடை. யாரும் அதன் மேல் நின்றுதான் அவனுடன் வியாபாரம்



நாயுடோரு:—என்ன, நாயுடோரு! பையன் ரொம்ப சின்னவனாகத்தானே இருக்கான்? அடுத்த வருஷம் பள்ளிக்கூடத்திலே சேர்த்து விட்டாப் போகிறது! இடமில்லாதப்போ நீங்களும் வந்து தொந்தரவு பண்றீங்களே!

நாயுடோரு:—அதுக்காகத்தானுங்களே நானும் எப்படியாவது இந்த வருஷமே சேர்த்துடணும்னு பார்க்கிறேன். ஏன்னா, எங்க வீட்டிலேயும் இடம் போதலீங்க! பையன் பள்ளிக்கூடத்துக்கு வறதும் போறதுமா இருந்தா கொஞ்சம் சௌகரியமா இருக்கும்னு பார்க்கிறேன்!

பேச்சுக்கு அப்புறம் தேவகியின் குரல் அவனுக்குத் தேவகானம் போலிருந்தது. தேவகியின் துள்ளல் அவன் உள்ளத்தையும் துள்ளும்படி செய்தது அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. தன்னைவிட எட்டு வயது சிறிய அவள், அந்தக் கிராமத்தில் மலர்ந்த முகத்துடன் இருக்கும்பொழுது தான் மட்டும் முகத்தைச் சுளித்துக் கொண்டிருப்பது அவனுக்கு வேடிக்கையாயிருந்தது. அந்தக் கிராமத்தைப் பற்றித் தான் கொண்ட அபிப்பிராயம் அவ்வளவு சரியானதல்ல என்று அப்பொழுதுதான் அவனுக்குப் பட்டது.

இன்னொரு தடவை எழுதிய கார்டைத் தபாலில் சேர்க்க மறுபடியும் தேவகி வந்தாள். மின்னல் வேகத்தில்தான்! மைக் கூட்டிற்குள் போட்ட அரையணாவை எடுப்பதில் மூழ்கியிருந்த அவன், கலீர் என்ற ஓசை கேட்டு சிலிர்த்தான். அதே வேகத்தில் அவள் மைக் கூட்டைக் கீழே தட்டிவிட்டதைப் பார்த்து அவன் சிரித்தான்.

கொஞ்சம் கொஞ்சமாக விஷயங்களை அவளிடமிருந்து தெரிந்துகொண்டான் வாசுதேவன். விடியற்காலையில் தினசரி தன் திண்ணைமட்டில் ஜலம் தெளிப்பது அவள் தான் என்று தெரிந்ததும் அவனுக்கு வியப்புதான் மேலிட்டது. அவ்வளவு சீக்கிரம் எழுந்துகூட ஊர் பூராவும் இவ்வளவு சுறுசுறுவென்றிருக்கிறதே என்பதில்தான் வியப்பு. அந்த வியப்பில், விடிந்து எட்டு மணி வரை தூங்கினால் தான் பகலில் தூங்காமல் இருக்கலாம் என்ற அவனுடைய சித்தாந்தம் சிதறிப் போனதைக்கூட அவன் பொருட்படுத்தவில்லை.

மறுநாள் விடியற்காலம் அந்தச் சலசலவென்ற சத்தம் அவன் காதிற்கு இனிமையாக இருந்தது. இடையிடையே கேட்ட வளையல்களின் ஒலி மதுரகானமாயிருந்தது. படுத்தபடியே மேலே பார்ப்பதற்கு சித்திரங்கள் இல்லாமலிருந்தால் கண்ணுக்குத் தாளிருக்காது என்ற சிருஷ்டி தத்துவத்தின் அழகைக்கூட அவனால் அப்போது உணர முடிந்தது. அந்த மங்கிய வெளிச்சத்தில் பிள்ளையார் கோவில் லாந்தர் 'பட் பட்' என்று அவனைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டியது அவனைப் பரிகாசம் செய்வது போல் தோன்றியது. பதிலுக்கு அவனும் கண்ணைச் சிமிட்டினான்.

காலையில் பல் தேய்த்ததும் தேவகி அவனைக் கூப்பிட வந்துவிட்டாள். "அப்பா உன்னைப் பார்க்க வேண்டும் என்கிறார்!" என்ற கட்டளையை அவனால் தட்ட முடியவில்லை. தேவகியுடன் சென்ற அவனை



அவள் தகப்பனார் சந்தோஷத்துடன் உபசரித்தார்.

"நீங்கள் தனியாக வந்திருக்கிறீர்கள். சிறு வயது. தனியாகச் சமைத்துச் சாப்பிடுவதற்குப் பொறுமை இருக்காது. நீங்கள் இங்கேயே சாப்பிடுங்கள்!" என்ற அவர் அழைப்பு அவனுக்கு அவ்வளவாகப் பிடிக்காவிட்டாலும், தேவகியின் ஆமோதிப்பைப் பார்த்த பிறகு அவனும் மறுக்க முடியவில்லை.

• • •

அப்புறம் ஒன்றரை வருஷம் போன வழியே தெரியவில்லை. அந்த ஒன்றரை வருஷத்தில் வாசுதேவன் ரொம்பவும் மாறிவிட்டான். தேவகியும் எவ்வளவோ மாறிவிட்டாள். அவள் நடையில் ஓட்டமும் துள்ளலும் போய் அடக்கம் வந்து புகுந்துவிட்டது. காரியங்களை வேகமாகச் செய்

நாளும் ஒரு நிதானம் தென்பட்டது. முன் போல் அவன் அவளிடம் வாயாடுவதில்லை. ஆனால் வாசுதேவன் தன் அன்பை அவ்வப் பொழுது சிறுசிறு காரியங்களி லிருந்து உணர முடிந்தது. முதலிலெல் லாம் ஒரு விளையாட்டுச் சாமானைப்போல் அவள் மனத்தை அவன் கவர்ந்திருந் தான். ஆனால் இப்பொழுதோ அவளை நினைக்கும்பொழுது அவன் மனது வேக மாக அடித்துக் கொண்டது.

இப்படியே நாட்கள் கழிந்து கொண் டிருக்கும் என்று வாசுதேவன் நினைக்க வில்லை. என்றைக்காவது ஒருநாள் மாறுதல் ஏற்படப் போகிறது என்ற நினைவே அவனுக்குப் பெரிய பாரமா யிருந்தது.

கடைசியில் ஒருநாள் அவன் பயம் உண் மையாயிற்று. தேவகியின் தகப்பனார் தன் மகளுக்கு மாப்பிள்ளை தேடிப் பிடித்து விட்ட விஷயம் தெரிந்தவுடன் நிலை கொள் ளாமல் தவித்தான். தனக்கும் தேவகிக்கும் ஒரு நேசம் இவ்வளவு நாட்களிருந்திருந் தாலும் அதை வைத்துக்கொண்டு அவளைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று அவன் எப்படிச் சொல்வது? சொன்னாலும் அவன் சுயமரியாதை போகுமே ஒழிய, அவன் சொல்வதை யார் கேட்கப் போகி றார்கள்?

இந்த மன வேதனையுடன் அவன் அன்று தபால்களை வேகமாகப் பிரித்துக் கொண் டிருந்தான். தன் விலாசமிட்டு வந்திருந்த ஒரு கடிதத்தை அவன் சலிப்புடன் பிரித் தான். ஆனால் அந்தக் கடிதம்தான் சிறிது ஆறுதலை யளித்தது அவனுக்கு. காட்டூரை விட்டு வெளியே போவதற்கு வழி காட்டி யது அந்தக் கடிதம். "வேண்டுமானால் நீங்கள் சண்டையில் சேர்ந்து அரசாங்கத் திற்கு உழைக்கப் போகலாம். அந்த நல்ல காரியத்திற்காக நீங்கள் திரும்பி வரும் வரை உங்கள் உத்தியோகம் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கும்" என்று அந்தக் கடிதத்தில் கண்டிருந்தது. அதை உடனே அங்கீகரித்துப் பதிலும் எழுதிப் போட்டு விட்டான் வாசு.

வெகு சீக்கிரமாகவே அவனுக்கு அந்தக் கிராமத்தை விட்டுக் கிளம்பும்படி உத்தரவு வந்தது. நேராகத் தேவகியின் தகப்பனாரிடம் விஷயத்தைச் சொல்லி விடை பெற்றுக் கொள்ளப்போன அவன், திண்ணைப்படியில் படாரென்று முட்டிக் கொண் டான். அவன் இடித்துக் கொண்டதும் உள்ளிருந்து, "ஆ!" என்ற குரல் வந்தது. தேவகியின் குரல்தான். தனக்கு வலித் ததோ, இல்லையா என்று கூட யோசிக்க அவனுக்கு நேரமில்லை; அந்தக் குரலில் தொனித்த பரிவும், கனிவும்தான் அவன் உள்ளத்தை நிறைத்து விட்டதே!

தான் கிளம்புவதற்கு முன் எல்லோரிட மும் விடை பெற்றுக் கொண்டான் வாசு. தேவகியிடமும் தைரியமாய்ப் போய் விடை பெற்றுக் கொண்டான். ஆனால் நெஞ்சை என்னவோ செய்தது. மார்பு 'பட்பட்' என்று தாங்கமுடியாத வேகத்தில் அடித் தது. போய் வருகிறேன் என்றதும் அவள் கண்களில் துளித்த இரு கண்ணீர்த் துளிகள் கீழே உருண்டோடுவதைப் பார்க் காமல் அவனால் திரும்ப முடியவில்லை.

காட்டூரை விட்டுப் போகும்பொழுது தன் வாழ்க்கையின் சந்தோஷத்தையே அங்கே விட்டுவிட்டுச் செல்வதுபோல் தோன்றியது அவனுக்கு. தேவகியுடன் பழகி வந்த இரண்டு வருஷங்களில் அவளை விட்டுப் பிரிவது என்னும் விஷயம் அவன் முன் வந்ததில்லை. ஆனால் இன்று அவளை விட்டுப் பிரிந்து செல்லும்பொழுது நெஞ்சைப் பிசைக்கும் அந்த உணர்ச்சி அவனுக்குப் புதிதாக இருந்தது. அவள் இல் லாமல் அவன் இருக்க முடியாது என்ற இதயத்தைப் பிசைக்கும் அந்த உணர்ச்சி எங்கிருந்து வந்தது என்பது அவனுக்குத் தெரியவே யில்லை.

'லொடக், லொடக்' என்ற வண்டிச் சத்தம்கூட அவன் காதில் 'தேவகி, தேவகி!' என்றுதான் ஒலித்தது. அவன் இதயமும் "தேவகி, தேவகி!" என்று அடித்துக் கொள்வது போலத்தான் இருந்தது அவனுக்கு!

* * *

வாசுதேவனின் தேக அமைப்பைப் பார்த்துவிட்டு அவனைப் போர்முனைக்கு உடன் போகத் தகுதியுள்ளவன் என்று ஒரு மனதாகத் தீர்மானித்தார்கள் ராணுவ அதிகாரிகள். அதை அவனும் ஆட்சேபிக்க வில்லை. ஓயாமல் அலைபாயும் மனம் போர் முனையில் அமைதியாகி விடலாம் என்ற எண்ணம் அவனை அதற்குச் சம்மதிக்கச் செய்தது.

ரத்தத்தின் வெறியிலும், பீரங்கியின் முழக்கத்திலும் தேவகியை மறந்துவிட அவன் எண்ணினான். ஆனால் அவன் நினைத்தது தவறாகத்தான் முடிந்தது.

துப்பாக்கிக் குண்டுகள் அவனை நெருக் கமாகவே சென்று விட்டன. பீரங்கிச்

சத்தம் "தேவி!" என்று வானொலியிற் கத்துவது போல்தானிருந்தது. முதலில் மறக்கலாம் என்று தீர்மானித்தாலும், தேவி அவன் ஒவ்வொரு செய்கையிலும் புகுந்து செம்மைப் படுத்தியது அவனுக்கு ஆச்சரியமாகவே யிருந்தது. தவிரவும் அவன் உள்ளத்தின் அடிவாரத்தில் தேவியை அடையும் ஆசையும் புகைந்து கொண்டேயிருந்தது.

ஒரு வருஷத்திற்குப் பிறகு அவன் நினைவுகள் அவனை இன்னும் அதிகமாகத் துன்புறுத்தின. காட்டேரையும், தேவியையும் இன்னொரு முறை பார்க்க வேண்டும் என்னும் ஆசை தீவிரமாக வேலை செய்தது. திரும்பவும் பழைய உத்தியோகத்திற்குப் போக அனுமதி கேட்டான்.

ராணுவ வைத்தியர்கள் வாசுதேவனின் தேக நிலையைப் பார்த்துவிட்டு, "ஊருக்குத் திருப்பி அனுப்புங்கள்!" என்று சிபார்சு செய்ததின் பேரில், அவன் விருப்பியபடி உத்தரவும் கிடைத்தது.

சென்னையில் வந்து தாய் தந்தையர்களுடன் இருந்தபோதும் அவன் மனம் காட்டேரையே நினைத்துக் கொண்டிருந்தது. இச்சமயத்தில்தான் தேவியின் மாமாவின் வலையில் அவன் கடைசியாக மாட்டிக் கொண்டான்!

அப்பாவிற்கும் அம்மாவிற்கும் திருப்தியை அளிப்பதற்காக வாசு பெண்ணைப் பார்க்க ஒத்துக் கொண்டான். எப்படியாவது தட்டிக் கழித்துவிட்டுத் திரும்புவது என்று எண்ணிச் சென்றான். அவ்வாறு பெண் பார்க்கச் சென்ற இடத்தில்தான் அவன் தேவியைக் கண்டான்! "தேவி!" என்று உணர்ச்சி ததும்ப அழைக்கவும் அழைத்தான்! ஒன்றும் தெரியாத மாமாவும் மற்றவர்களும், "தங்கை!" என்று கேட்ட தேவியின் தவறைப் பெரிய தவறு என்று எண்ணினார்கள். ஆனாலும் கடைசியில் எப்படியோ கல்யாணம் முடிந்ததில் மாமாவிற்குச் சந்தோஷம்தான். ஏனெனில், அத்தனை நாளும் தேவியின் பக்கத்தில் இருந்த சர்வேயர், இப்போது மாமாவின் பக்கத்தில் வந்து சேர்ந்து விட்டாரல்லவா?

• • •

வாசுதேவனுக்குப் புரியாமலிருந்த விஷயங்கள் அப்புறம் தெளிவாய் விட்டன. தன் கல்யாணப் பேச்சு முறிந்ததும் தேவியும் காட்டேரை மறக்க எண்ணிச் சென்னையிலிருந்த தன் மாமாவின் வீட்டில் அடைக்கலம் புகுந்தாள்.

கல்யாணத்திற்குச் சில நாளைக்கப்புறம், "காட்டேருக்குப் போக வேண்டாமா?" என்று தேவியைக் கேட்டான் வாசு.

"இனிமேல் எந்தக் காட்டுக்கும் வரத் தயார்!" என்ற பதில் சட்டென்று வந்தது.

"ஏது இன்னும் நீ பெரிய வாயாடியாகத்தா னிருக்கிறாய்!" என்று வாசு அவள் கன்னத்தை லேசாகத் தட்டப் போனான். அவள் லாகவமாக ஒதுங்கிக் கொள்ளவே, அவன் கை படாரென்று மேஜையில் முட்டிக் கொண்டது!

அவன் "ஆ!" என்றான்.

"உனக்கு ஏன் வலிக்க வேண்டும், நான் இடித்துக் கொண்டால்!" என்று கேட்டதற்குப்பதிலாக, "ஏனோ!" என்ற வார்த்தை ஏதோ ஒரு ராகம்போல் அவள் இனிய குரலோடு இழைந்து வந்தது அப்போது அவன் முகத்தில் தோன்றிய இந்திரஜாலங்கள் அவளைப் பரவசப்படுத்தின!

★ ● ★


★ கல்கி வாரப் பதிப்பு

இந்தியா & சிலோன்

| | | | |
|---|---|---|---|
| வருஷச் சந்தா | ... | ரூ. | 13—0—0 |
| ஆறு மாதச் சந்தா | ... | ரூ. | 6—8—0 |
| தனிப் பிரதி | ... | அணா | 0—4—0 |

வெளி நாடு

| | | | |
|---|---|---|---|
| வருஷச் சந்தா | ... | ரூ. | 16—4—0 |
| ஆறு மாதச் சந்தா | ... | ரூ. | 8—2—0 |
| தனிப் பிரதி | ... | அணா | 0—5—0 |

★ மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை

# "ரோஜா மார்க்" நெய்

சமீபத்தில் கலப்பற்றது என்பதற்கு கிடைத்த ஒரு அத்தாட்சி

MUNICIPAL HEALTH OFFICE

From
Major V. Hariharan, M.B.B.S., D.S.Sc.,
Municipal Health Officer,
Coimbatore.

To
Lingam & Co.,
Oppanakara Street,
COIMBATORE.

No. 289/46/S3 Dated 7-12-1946

Sirs,

Ref: Your letter dated 3-12-1946.

Sample No. 4574 is declared as genuine.

V. Hariharan, Major,
Municipal Health Officer.

/True copy forwarded/
By Order
Head Clerk.

TC/7-12-c.

எல்லா ஊர் வியாபார கூட்டுறவு சங்கங்களிலும்
நம்பகமான வியாபாரிகளிடமும் கிடைக்கும்

3 வீசை, 12 வீசை புத்தம் டின்களில் அடைக்கப்பட்டது

14/86, ஒப்பணக்கார வீதியில் உள்ள டிப்போவில்

டென்மார்க்கில் செய்யப்பட்ட பாத்திரங்களில் நெய் வைத்து விற்கப்படுகிறது
இதனால் சாதாரண டின்களில் உட்புறம் துரும்பு பிடித்து நெய் கெட்டுப்போகாது

தயாரிப்பவர்கள்: **லிங்கம் கம்பெனி, கோயமுத்தூர்** டெலிபோன் நெ. 192



# 'ஆஸ்ப்ரோ'

*இதோ வந்துவிட்டது!*




**போலிகளை வாங்காதீர்கள்.**
ஒவ்வொரு வில்லையின்மேலும் 'ஆஸ்ப்ரோ' என்ற வார்த்தை இருப்பதைக் கவனிக்கவும்
'ஆஸ்ப்ரோ' வலியையும் ஜுரத்தையும் 10 நிமிஷங்களில் போக்கும். இருதயத்துக்காவது வயிற்றுக்காவது கெடுதி செய்யாது



'ஆஸ்ப்ரோ'
கட்டுப்பாடு செய்யப்பட்ட விலைகள்:

5 வில்லைகள் கொண்ட பாக்கட் . . . 1 அணா
30 வில்லைகள் கொண்ட பாக்கட் . . . 10 அணா

'ஆஸ்ப்ரோ'
எங்கும் கிடைக்கும்.






## கிராக்கிக்கு மெத்தனையோ குறைவாகத்தான்

எங்களிடம் சரக்குகள் விற்பனைக்குள்ளன. சிறந்த சாமான்களுக்கு வேறு விளம்பரம் ஏன், இதுவே எப்பொழுதும் எமது கொள்கை. எனினும், எங்கள் வர்த்தக முத்திரைக்கிருந்துவரும் நன்மதிப்பானது, அந்த முத்திரையை பிரசித்திப் படுத்துவதையே ஆதாரமாகக் கொண்டதென்பதை நாம் மறந்துவிடலாகாது. பிரசித்தப் படுத்துவது எதற்காகவென்றால், "நாங்கள் இன்னும் வேலை தொடர்ந்துதான் வருகிறோம். கூடிய சீக்கிரம் போதுமான சரக்குகள் உங்களுக்குக் கிடைக்கச் செய்வோம்" என ஆவசியக்காரர்களுக்கு உறுதி கூறவேதான்.

**கம்பளி:** பூராவும் கம்பளி ஸூப்பர் ப்ளாங்கெட்டுகளும் பிரயாண ரக்குகளும்—ட்வீடுகளும், கேரிய கம்பளி தினுசுகளும், யூனியன் ஷர்ட்டிங்குகளும்.

**பருத்தி:** ஸெல்லா ஷர்ட்டிங்குகளும், கேரிபு லாங்கிலாத்தும்—கோல்ட் ஸ்டாண்டர்ட் ஷர்ட்டிங்குகள்—லேடீ லாங்கிலாத்தும், சாயம் தோய்த்ததும்—ஸாம்ரா ஸூட்டிங்குகள் — டஸ்ஸோர்கள் — ட்ரில்கள் — டிவில்கள் வகையறா......

**பட்டு:** 44"/45" அகலம், பற்பல சாயல்களில்.

*தயாரிப்போர்கள்:* தி பாங்களூர் வூலன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கோ., லிட்.



ஏஜண்டுகள், காரியதரிசிகள், பொக்கிஷதாரர்கள்

பின்னி & கோ.

(சென்னை) லிட்.

"ஆடு மார்க்கு"—கனிவதற்குகந்த துணிகளின் அறிகுறி.

# ஏமாந்த கரடியார்

பி. எஸ். பலராமன்

மளிகைக் கடைக் கரடியாரைக் கண்டால் அந்தக் காட்டில் எந்த மிருகத்துக்கும் பிடிப்பதில்லை. ஏனெனில், என்னதான் சர்க்கரையாய்ப் பேசினாலும் அவர் யாருக்கும் ஒரு கால் வீசை சர்க்கரை கூடக் கொடுக்க மாட்டார்!

கரடியார் கள்ளமார்க்கட் வியாபாரம் செய்வதில் புலி! பத்து மூட்டை சர்க்கரை வந்தாலும் பத்து நிமிஷத்தில் 'பில்' புத்தகத்தை நிரப்பிவிட்டு, மூட்டைகளை ஒன்றுக்குப் பத்து விலையாக வைத்து, வேறு காட்டுக்கு விற்று விடுவார்.

காட்டில் இருந்த எல்லா மிருகங்களும் கூடி, இதற்கு ஏதாவது ஒரு வழி செய்ய வேண்டுமென்று யோசித்தன.

"ராத்திரியில் கடைக்குள் புகுந்து கரடியாருக்குத் தெரியாமல் சர்க்கரை மூட்டைகளைத் திருடி விடுவோமே!" என்றது எலி.

"கரடியாரின் கணக்குப் பிள்ளையான பூனைதான் இரவெல்லாம் சர்க்கரை மூட்டைகளுக்குப் பக்கத்திலேயே காவல் இருக்கிறதே, பகலில்தான் திருட வேண்டும்!" என்றது குரங்கு.

"அந்தப் பாழும் கரடி பகலில் முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டிருக்குமே! அதன் கண்ணில் படாமல் எப்படித் திருடுவது?" என்றது முயல்.

கடைசியில், நரியும் முயலும் அன்று ராத்திரி முழுவதும் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தன.



மறுநாள் அவை அவசர அவசரமாக மளிகைக் கடைக் கரடியாரிடம் போய், "கரடி ஸார்! கரடி ஸார்! காட்டில் உணவுப் பஞ்சம் அதிகமாகி விட்டது. ஆகையால் அகில உலக மிருகங்களின் உணவு மகாநாடு ஒன்று நடத்த நாங்கள் உத்தேசித்திருக்கிறோம். அதற்குத் தாங்கள்தான் தலைமை வகிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டன. கரடியாரும் அதற்கு உடனே ஒப்புக் கொண்டார்!

"மகாநாட்டுக்கு வேண்டிய சாமான்களெல்லாம் தயார் செய்ய வேண்டாமா?. அதற்காக நாளை காண்டாமிருகனார் வீட்டில் காரியக் கமிட்டிக் கூட்டம் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறோம். பத்து மணிக்கே தாங்கள் வந்துவிட வேண்டும்" என்று நரி மேலும் கரடியாரை வேண்டிக் கொண்டது.

"ஆகா! அதற்கென்ன, காலை ஏழு மணிக்கே வேண்டுமானாலும் வந்துவிடுகிறேன்!" என்றார் கரடியார்.

நரியும் முயலும் உடனே அடுத்த காட்டிலிருந்த யானையார் வீட்டுக்குச் சென்று, அவர் காதோடு காதாக ஏதோ சொல்லிவிட்டுத் திரும்பி வீட்டுக்குப் போய் விட்டன.

மறுநாள் கரடியார், பூனையைக் கடையில் உட்கார வைத்துவிட்டுக் காரியக் கமிட்டிக் கூட்டத்திற்குப் போனார். திரும்பி வந்ததும், அந்த மாதக் கோட்டா சர்க்கரை அவ்வளவும் விற்றுப் போய் விட்டதாக அவர் வழக்கம் போல் பொய் 'பில்'களைப் போட்டார். இரவோடு இரவாக பக்கத்துக் காட்டுக்குப் பத்து மூட்டை சர்க்கரையையும் ஒன்றுக்குப் பத்தாக விற்று விட்டு வீட்டுக்குப் போனார்.

அடுத்த நாள் காலையில் கரடியாரின் மளிகைக் கடைக்கு எதிரே ஒரே கூட்டம். நரியும் முயலும் ஒன்றும் தெரியாதவை போல அந்தக் கூட்டத்திற்குள் நுழைந்து,



யோசனையும்........



........முடிவும்



பெரியவரான யானையாரிடம், "ஐயா, யானையாரே! என்ன விசேஷம்!" என்று கேட்டன.

"உங்கள் கரடியாரின் யோக்கியதையைக் கேட்டாயா? ஐம்பது ரூபாய் பெறுமானமுள்ள சர்க்கரை மூட்டையை இருநூறு ரூபாய் என்று விலை பேசி, பத்து மூட்டை நேற்று இரவு ஒரு விருந்துக்காக வாங்கிக் கொண்டு போனேம். இந்த அயோக்கியக் கரடி பத்து மூட்டை சர்க்கரைக்குப் பதிலாகப் பத்து உப்பு மூட்டைகளை வண்டியில் ஏற்றி அனுப்பி எங்கள் மானத்தை வாங்கி விட்டது, ஸார்! இதைச் சிங்க ராஜாவினிடம் இழுத்துக் கொண்டு போய்த் தகுந்த தண்டனை வாங்கிக் கொடுக்காமல் விட்டு விடலாமா, ஸார்!" என்று யானையார் ஆத்திரத்துடன் கத்தினார்.

உடனே நரியும் முயலும் விழுந்து விழுந்து சிரித்தவண்ணம், "செய்யுங்கள், செய்யுங்கள்!" என்று சொல்லிக்கொண்டே அந்த இடத்தை விட்டுப் போய் விட்டன.

"ஆகா, இந்த அயோக்கியப் பயல்கள் சூழ்ச்சியாக நம்மை மீட்டிங்குக்கு அனுப்பிவிட்டு, சர்க்கரை மூட்டைகளையெல்லாம் திருடிக் கொண்டு போயிருக்கிறார்கள். போனவர்கள் சும்மாவாவது போனார்களா? அதற்குப் பதிலாக உப்பு மூட்டைகளை வைத்துவிட்டுப் போயிருக்கிறார்கள்! உம்... அவர்களைச் சொல்லிக் குற்றமில்லை. பூனைக்குப் பகலில் கண் தெரியாது என்று தெரிந்திருந்தும், அதைக் காவல் வைத்து விட்டுச் சென்ற என் புத்தியைச் சொல்ல வேண்டும்!" என்று தலையில் அடித்துக் கொண்டார் கரடியார்.

ஆனாலும், சிங்கராஜா கரடியாரைச் சும்மா விட்டுவிடவில்லை, "மூவாயிரம் ரூபாய் அபராதம்; இல்லையென்றால் மூன்று வருடம் கடுங் காவல்!" என்று தண்டனை விதித்தார்.

கரடியாருக்கு மூவாயிரம் ரூபாய் அபராதம் கட்ட மனம் வராமற் போகவே, மூன்று வருடம் கடுங் காவல் தண்டனையை அனுபவித்தார்!



# படித்துப் பார்!

## கம்பன் பிள்ளைத் தமிழ்

[ஆசிரியர்: நா. கனகராஜையர்; பிரசுரம்: கம்பன் கழகம், காரைக்குடி; விற்பனை உரிமை: இலக்கியப் பதிப்பகம், காரைக்குடி; விலை: ரூ. 1.]

இது மகா கவியாகிய கம்பனுடைய பெருமையைப் புகழ்ந்து, பழந்தமிழ் இலக்கிய முறையிலே எழுதப்பட்ட ஒரு சிறு காவியமாகும். கம்ப ராமாயணத்திலுள்ள சுவை மிக்க பல பகுதிகளை இந் நூலாசிரியர் தேர்ந் தெடுத்து அவற்றைத் தம் நூலில் புகுத்தி, அதன் மூலம் கம்பனைப் பாராட்டியிருப்பது நன்றாக இருக்கிறது. கவிதைப் பேரரசான கம்பனைச் சரியாகப் பாராட்டுவதற்கு, அந்த மகா கவியின் பாட்டினால்தானே முடியும்?

## எத்தன் ஏகாம்பரம்

[ஆசிரியர்: ஸ்ரீ. சுப்பிரமணியம் பிள்ளை; பிரசுரம்: தமிழ் நிலையம், புதுக்கோட்டை; விலை: ரூ. 1—8—0.]

தகப்பனார் இல்லாத சமயம் ஒருவன் ஒரு பிச்சைக்காரப் பெண்ணைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்கிறான். அதே மாதிரி அவன் தம்பியும் ஒரு தாசிப் பெண்ணைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்கிறான். வெளியிலிருந்து திரும்பிய இருவருடைய தகப்பன்மார்களுக்கும் இந்த இரகசிய விவரங்கள் தெரிந்து விடுகின்றன. அவர்கள் கண்ணில் படாமல் இரண்டு வாலிபர்களும் திரிகின்றனர். எத்தன் ஏகாம்பரம் என்பவன் பல சூழ்ச்சிகள் புரிந்து அந்த வாலிபர்களைக் காப்பாற்ற முயல்கிறான். கடைசியில் கதைகளின் சம்பிரதாயத்தை யொட்டி அந்தப் பிச்சைக்காரப் பெண் தனபரொருவரின் காணாமற் போன மகள் என்பது வெளியாகிறது. தாசிப் பெண்ணும் உண்மையில் தாசி குலத்தைச் சேர்ந்தவளல்லவென்று வழக்கம் போல் தெரிந்து விடுகிறது. முடிவில் எல்லோருடைய குறையும் தீர்ந்து நாடகம் மங்களகரமாக முடிகிறது. சுபம்.

## உபகுப்தர்

[ஆசிரியர்: க. குருசாமி பி. ஏ., எல். டி., பிரசுரம்: அருணோதய நிலையம், வேலூர், சேலம்; விலை: ரூ. 2.]

இதில் மொத்தம் ஏழு நாடகங்கள் இருக்கின்றன. பிரசித்த பௌத்த பிக்ஷுவாகிய உபகுப்தரைப் பற்றிய நாடகம் முதல் நாடகமாக அமைந்திருக்கிறது. ஒளவையாரைப் பற்றிய "பாரியின் பரி" என்ற நாடகத்தைத் தவிர, பாக்கி ஐந்து நாடகங்களும் தற்கால வாழ்க்கையைச் சித்திரிக்கின்றன.

தமிழில் 'நாடக' நூல்கள் அதிகமாக இல்லையென்ற குறையைப் போக்குவதற்காக இந்த நூலை வெளியிட்டதாகப் பிரசுரகர்த்தர்கள் பதிப்புரையில் சொல்லுகிறார்கள். உண்மை.

## குமுதம்

[சந்திரிகா பிரசுரம்: 31-ஏ, சுப்பய்யச் செட்டித் தெரு, பழைய மாம்பலம், தியாகராய நகர், சென்னை; விலை: ரூ. 1.]

ஒன்பது கதைகள் கொண்ட இந்த வெளியீட்டை, கதைகளை விரும்பும் நேயர்கள் மிக்க மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள். ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு துறையில் அழகாக அமைந்திருக்கிறது. 'குமுதம்' என்ற பெயருக் கேற்ப புத்தகமும் பார்ப்பதற்குக் கவர்ச்சியாகவும் அழகாகவும் இருக்கிறது.

## ஆன்டன் செஹாவ்

[எழுதியவர்: புரசு பாலகிருஷ்ணன்; பிரசுரம்: தமிழ்ப் புத்தகாலயம், மயிலாப்பூர், சென்னை 4; விலை: ரூ 3—8—0.]

ஆன்டன் செஹாவ் சிறு கதை எழுதுவதில் பிரசித்தி பெற்ற ருஷ்ய எழுத்தாளர். 'சிறு கதை மன்னன்' என்றுகூட உலகப் புகழ் பெற்றவர். ருஷ்ய இலக்கியத்துக்கு அவர் செய்திருக்கும் தொண்டு கொஞ்ச நஞ்சமல்ல. அவ்வளவு பெரிய எழுத்தாளருடைய வாழ்க்கையைப் பற்றிய புத்தகம் தமிழில் வெளிவந்திருப்பது இதுவே முதல் தடவையாகும்.

ஸ்ரீ பாலகிருஷ்ணன் செஹாவையும் அவருடைய இலக்கியத்தையும் ரசித்துப் பாராட்டி அதிலேயே மூழ்கித் திளைப்பவர்களிலே ஒருவர்; செஹாவைப் பின்பற்றி அவரே பல சிறு கதைகளும் எழுதியுள்ளார். அத்தகையவரே செஹாவின் வாழ்க்கையைப் பற்றிய புத்தகம் எழுதுவது ரொம்பவும் பொருத்தமான விஷயமாகும். சிறு கதைகளை விரும்பிப் படிக்கும் நம் மக்கள் புகழ்பெற்ற இந்தக் கதாசிரியருடைய வாழ்க்கையைப் படிக்க வேண்டியது அவசியமாகும்.




"மூக்குக் கண்ணாடியிலும் ஏன் வைரக் கற்கள் பதித்து விற்கக் கூடாது?" என்று ஒரு நாரீமணி கேட்கிறாள்! நியாயந்தானே?

# மேலாடை

கு. ரா.

ஆடைகளில் சிறந்தது மேலாடைதான்; சந்தேகமில்லை. பால் காய்ந்து கொண்டிருக்கும்போது அதன் மேல் படியும் ஆடையைப் பற்றி நான் இங்கு சொல்ல வரவில்லை; நான் சொல்லப் போவது மக்கள் தங்கள் உடம்பின் மேல் பாகத்தை மூடுவதற்காகத் தரித்துக் கொள்ளும் மேலாடையைப் பற்றித்தான்!

முன் காலத்தில் நம் நாட்டில் ஆண்களும் பெண்களும் தனித்தனியாக இரண்டு ஆடைகள் அணிந்து கொண்டு வந்தார்கள். இடுப்பில் பீதாம்பரம் உடுத்தி, இடுப்புக்கு மேல் 'உத்தரீயம்' என்று வழங்கப்பட்ட மேலாடையைத் தரித்துக் கொண்டார்கள். "உத்தரீயத்தொடு தோள் போற்றி!" — அதாவது, "உத்தரீயம் தொட்டுக் கொண்டிருக்கிற தோள்களை வணங்குவோமாக!" என்ற பாட்டு இதைத்தான் விளக்குகிறது போலும்!

திருமால் எப்பொழுதுமே அலங்காரப் பிரியர். ஸ்ரீதேவி, பூதேவி இருவரும் பக்கத்திலேயே இருப்பதால் அவர் சதா பட்டுப் பீதாம்பரம், உத்தரீயம், வைஜயந்தி மாலை வகையறாக்களுடன் 'டிப்-டாப்' ஆக 'டிரஸ்' செய்து கொண்டிருக்க வேண்டிய சிரமம் ஏற்பட்டு விடுகிறது! சமுத்திர ராஜனே மகாவிஷ்ணுவின் பளபளப்பான ஆடைகளின் அழகைக் கண்டு மயங்கி, தன் மகளாகிய லக்ஷ்மியை அவருக்கு மணம் செய்வித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. குளிர்ந்த இமயமலைச் சாரலில் வசிக்கும் காரணத்தினால் கனமான யானைத் தோலைப் போர்த்திக் கொண்டிருந்த பாவத்தின் பயனாக, 'அநாகரிகமானவர்' என்று சிவபெருமானது மனுவைச் சமுத்திர ராஜன் நிராகரித்து விட்டு, விஷ்ணுவையே மாப்பிள்ளையாகத் தெரிந்தெடுத்தானாம்! இத்தனைக்கும் சிவபெருமான் செக்கச் செவேலென் றிருப்பவர்; மகாவிஷ்ணுவோ அட்டைக் கரி என்பதை நினைக்கும்போது, இந்த மேலாடையின் மகத்துவம் எல்லாவற்றிற்கும் மேலாகப் போய்விடுகிறதல்லவா?

இராவணனால் தூக்கிச் செல்லப்பட்ட சீதை, ராமலக்ஷ்மணர்களுக்குத் தான் போன வழி தெரியும் பொருட்டுத் தன் மேலாடையைக் கிழித்து அதில் தன்னுடைய நகைகள் சிலவற்றைக் கட்டிக் கீழே போட்டுக் கொண்டே போனதாக இராமாயணம் சொல்லுகிறது. தன்னுடைய மேலாடைக்கு இவ்விதம் உபயோகம் கண்டு பிடித்த ஜனகராஜ குமாரியின் சமயோசித சாமர்த்தியத்தைத்தான் என்னவென்பது!

கர்ணனது வாழ்வில் ஒரு மேலாடை முக்கிய பங்கு எடுத்துக் கொண்டிருக்கிறது. குந்திதேவி தன் மேலாடையுடன், தான் ஈன்ற கர்ணனை ஆற்று வெள்ளத்தில் விட்டுவிட்டாள். கர்ணனை எடுத்து வளர்த்தவர்கள் அந்த மேலாடையையும் காப்பாற்றி வந்தனர். எத்தனையோ பெண்கள் கர்ணனிடம் வந்து, "நான்தான் உன் தாயார்!" என்று பொய் சொன்னார்கள். கர்ணன் அவர்களிடம் அந்தத் தெய்விக மேலாடையைக் கொடுத்துப் பரீட்சித்தான். கடைசியாக வந்த குந்தியிடமும் கொடுத்தான். அவள் அதை எடுத்துப் பிரித்து உடல்படப் போர்த்துக் கொண்டு ஈன்ற தாய் போல நின்றாள். அவளுடைய தோற்றமே கர்ணனுக்கு நம்பிக்கை அளித்தது என்கிறது மகாபாரதம்.

குளிரால் நடுங்கிக் கொண்டிருந்த மயிலுக்குத் தன் மேலாடையைப் போர்த்தி விட்டுத் திறந்த மேனியனாக அரண்மனைக்கு வந்து சேர்ந்த தமிழ் வள்ளலின் கதை, இன்று வரை ஜீவகாருண்யத்துக்கு இலக்ஷியமாக விளங்குவதற்குக் கூடக் காரணம் மேலாடைதானே?

நாம் ரயில் வண்டியில் ஜன்னல் அருகில் உட்கார்ந்து கொண்டிருக்கும் போது எட்டிப் பார்க்கிறோம். அப்பொழுது நம் மேல்துண்டு காற்றில் பறந்து வெளியே விழுந்து விடுகிறது. நாம் அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுக்கலாமா, வேண்டாமா என்று யோசனை செய்வதற்குள் ரயில் பல மைல்கள் கடந்து விடுகிறது. இதே நிலைமை நளன் ஓட்டிக்கொண்டு போன தேரில் உட்கார்ந்திருந்த ருதுபர்ண மகாராஜாவுக்கும் ஏற்பட்டதாம். தன் மனைவியாகிய தமயந்தியை ருதுபர்ணன் மணக்கப் போகிறான் என்பது தெரிந்த நளனுக்கு, அவனை மேலாடை இல்லாமல் தமயந்தி முன் கட்டையாய் நிறுத்த வேண்டும் என்ற எண்ணம் போலும்! தேரை வெகு வேக

மாகச் செலுத்தினான். அரசன், "மேலாடை யோடு விழுந்து விட்டது, எடு!" என்று சொல்வதற்குள், ரதம் இருபத்து நான்கு காத தூரம் போய்விட்டதாம்!

"மேலாடை வீழ்ந்த தெடுமென்னும்
அவ்வளவில்
நாலாறு காதம் நடந்ததே!"

என்று பாடியிருக்கிறார் புகழேந்திப் புலவர்!

வைதிகர்களுக்கு அவர்கள் மேலே போட்டுக்கொண்டிருக்கும் யோக வேஷ்டி பல காரியங்களுக்கு உபயோகப்படுகிறது. தேங்காய் வெற்றிலைப் பாக்கு, பழம் முதலிய பண்டங்களை யாருக்கும் தெரியாமல் மறைவாகக் கொண்டு வரலாம். கல்யாணப் பந்தலில் மேல் வேஷ்டியை விரித்துப் பிடித்துக் கொள்ளச் சொல்லி, அதில் ஆசீர்வதித்த மஞ்சள் அரிசியைப் பெரியவர்கள் போடுவார்கள். முன்பெல்லாம் இந்த உத்தரீயத்திலேயே சுமார் ஒரு படி அரிசியும், தம்பதிகள் தலையில் தலைக்கு அரைப்படி அரிசியும் தேறும். இந்த அரிசி ரேஷன் வந்தாலும் வந்தது, மொத்தமாக ஒரு அவுன்ஸ் அரிசி கூடத் தேறவில்லையே!

கல்யாணப் பந்தலில் யோக வேஷ்டியைப் பார்த்தால், கல்யாணத்துக்கு வந்துள்ள கனதனவான்களிடம் விசிறி மடிப்பு மேல் வேஷ்டியைப் பார்க்கலாம். இந்த விசிறி மடிப்புக்காரர்கள் ரொம்ப சாதுவான ஆசாமிகளாகவே இருப்பார்கள். அடித்தால் அழமாட்டார்கள்; வாயில் விரலை வைத்தால் கடிக்க மாட்டார்கள்; பொறுமையின் பூஷணம் அவர்கள்! ஆனால் யாராவது விளையாட்டுக்காகவேனும் அவர்கள் விசிறி மடிப்பைச் சிறிது கலைத்து விட்டால் போதும், நாகப் பாம்பை அணிந்த ருத்ரனைப் போல் சீறுவார்கள்! அதே ஆசாமிகள் சிறிது நேரத்திற்குப் பிறகு புழுக்கம் தாங்காமல் இருக்கும் போது, தாங்கள் மேலாடையின் நுனியில் கொஞ்சம் பிரித்து ஜப்பான் விசிறி போல் செய்து கொண்டு விசிறிக் கொள்வதை நீங்கள் பார்க்கலாம்! என்னே, விசிறி மடிப்பின் விநோதம்!

ஆண் பாலர்கள் இடுப்பாடையை விட மேலாடையில்தான் அதிக கவனம் செலுத்துகிறார்கள். எங்கள் ஊர்க் குடியானவர்களெல்லாம் இடுப்புக்குக் கோவணம்தான் கட்டியிருப்பார்கள். தோளின் மேல் பெரிய துண்டைப் போட்டுக்கொண்டிருப்பார்கள். இதுவே சில சமயம் முண்டாசாக வேற்றுருவம் எடுத்தாலும் எடுக்கும்!

இனி நமது தேசியத் தலைவர்களை, மேலாடை அணிவதைக் கொண்டு மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். ஒரு பெரிய துணியை மேலே போர்த்திக் கொள்ளுகிறவர்கள் ஒரு சாரார். காந்திஜி, படேல், காலஞ் சென்ற சி. ஆர். தாஸ், சுபாஷ் சந்திர போஸ் ஆகியவர்கள் மேற்கூறிய ரகத்தைச் சேர்ந்தவர்கள். மேல் வேஷ்டியைக் கழுத்தில் ஒரு சுற்றுச் சுற்றியோ, அல்லது வெறுமனே மாலையாகவோ இரு பக்கமும் தொங்க விடுவோர் ஒரு கோஷ்டி; பண்டித மாளவியாவும், கோபாலகிருஷ்ண கோகலேயும் தீரர் சத்தியமூர்த்தியும் இந்த ரகத்தைச் சேர்ந்தவர்கள். பட்டையாக மடித்து ஒரு தோளில் மாத்திரம் போட்டுக் கொள்வதில் ராஜாஜிக்கு ஈடு ராஜாஜிதான்!

மேலாடை, பெண்களின் மேனி அழகை மேன்மைப் படுத்தும் ஆபரணம்; ஆண்களின் கம்பீரத்துக்கு ஆக்கம் அளிக்கும் சாதனம்; ஆணும் பெண்ணும் ஒன்று கூடும் மண மேடையில், அவ்விருவரும் உயிராலும் உணர்வாலும் ஒன்று சேர்வது போதாதென்று, உடையாலும் ஒன்று சேர வேண்டுமென விரும்பும் சிறுவர் சிறுமியர்களுக்கு முடி போடுவதற்கான உற்ற துணை; கடன்காரன் கண்ணில் பட்டும் படாமல் இருப்பதற்கு முட்டாக்காக உபயோகப் படும் சமய சஞ்சீவி; குளிருக்குப் போர்வை; வெய்யிலுக்கு விதானம்; வியர்வைக்கு விசிறி; கட்டாந்தரையைத் தட்டிப் படுத்துக் கொள்வதற்காக உபயோகமாகும் கருவி!



இந்தத் துணிப் பஞ்ச காலத்தில், ஐந்து கஜத்துக்குப் பதிலாக ஐந்து முழமே கிடைத்தாலும், நாம் மேலாடையின் புகழை மறக்காமல் இருப்போமாக!

மேலாடையின் புகழ் மேலோங்குக!



# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## பதினான்காம் அத்தியாயம்

## — தீராத ஆசை —

அன்று முதல் பத்மா தன் கணவன் விஷயத்தில் கண்ணும் கருத்துமாக நடந்து கொள்ளலானாள். அவன் ஸ்நானத்துக்குப் போகிறான் என்றால், அதற்கு வேண்டிய துணி மணி, சோப்பு முதலியவைகளைத் தயாராக எடுத்து வைப்பாள். அவன் ஆபீஸுக்குப் புறப்பட்டு விட்டால் அதற்கு வேண்டிய உடைகளையெல்லாம் எடுத்துக் கொடுப்பாள். அவன் சாப்பிட்டுக் கையலம்பி விட்டு வருவதற்குள் அவனுக்காக வெற்றிலைப் பாக்குத் தட்டுடன் தயாராக நிற்பாள். முன்பெல்லாம் ரமாநாத்துக்கு ஏதாவது வேண்டியிருந்தால் வாய் திறந்து கேளாமல் கிடைப்பதில்லை. இப்பொழுதோ, அவனுடைய குறிப்பறிந்து அவளே வேண்டியதெல்லாம் செய்யலானாள். முன்பெல்லாம் சமைப்பதென்றால் 'நமக்கு ஏன் இந்தத் தொல்லை?' என்று அதிலிருந்து தப்ப முயற்சிப்பாள். இப்பொழுதோ, தன் கணவன் சமையலில் குற்றம் குறை கண்டு பிடிக்காமலிருக்க வேண்டுமே என்பதற்காகத் தானே வலுக்கட்டாயமாகச் சமையல் வேலையில் ஈடுபட ஆரம்பித்து விட்டாள். உப்பு, புளி போடுவதில்கூட மிகவும் கண்ணும் கருத்துமாயிருக்கலானாள். ரமாநாத் அவளுடைய அன்பு நிறைந்த சேவையைக் கண்டு மனம் பூரிப்பான். 'நாம் ஏதோ இரண்டு நகைகளைச் செய்து போட்டு விட்டோமே தவிர, நம்மால் அவளைப்போல் எங்கே இருக்க முடிகிறது?' என்றெல்லாம் மனம் குன்றிப் போவான்.

* * *

அன்று கங்காராமின் கடையில் அவன் நகை வாங்கிய விஷயமும் அவனுடைய நகையாசையும் கடைத் தெரு பூராவும் காட்டுத் தீ போல் பரவி விட்டது. ரமாநாத் அந்தப் பக்கமாக எங்கேயாவது போனால் இரண்டு பக்கத்துக் கடைக்காரர்களும் எழுந்து 'சலாம்' செய்து, "வாருங்கள், முதலாளி! நம் கடையில் ஏதாவது எடுக்கக் கூடாதா? பேசாமல் போகிறீர்களே!" என்று கூப்பிட ஆரம்பித்து விட்டனர்.

ரமாநாத்தின் தன்னடக்கம் அவனுடைய கௌரவத்தை இன்னும் அதிகரிக்கச் செய்து விட்டது. ஒரு நாள் ஒரு நகைத் தரகன் அவனுடைய வீட்டுக்கே வந்து விட்டான். ரமாநாத் 'வேண்டாம், வேண்டாம்' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் அவன் கேட்கவில்லை; பெட்டியைத் திறந்தே விட்டான்.

ரமாநாத் தன்னை விடுவித்துக் கொள்ளும் நோக்கத்துடன், "நான் சொல்வதைக் கேள்; நானோ ஒன்றும் வாங்கப் போவதில்லை. எதற்காக உன் பொழுதையும் என் பொழுதையும் வீணாக்குகிறாய்?" என்றான்.

நாகன் ஆபீஸ் வேலில் விடுபவனாக இல்லை. அவன் மிகவும் ஊக்கத்துடன், "எசமான், நீங்கள் வாங்கினாலும் வாங்காவிட்டாலும் ஒரு தடவை பார்க்கக் கூடவா கூடாது? பிடித்தால் எடுத்துக் கொள்ளுங்கள், இல்லாவிட்டால் வேண்டாம். உங்களைப் போன்ற முதலாளிகளே எங்களை இப்படி விரட்டியடித்தால் அப்புறம் எங்களுக்குப் போக்கிடம் ஏது? பெரிய அம்மாவுக்கும் சின்ன அம்மாவுக்கும் காட்டுங்கள். பிடித்தால் எடுத்துக் கொள்ளட்டும், முதலாளி! உங்கள் கையாலே இன்று முதல் போணி ஆகும் என்று எனக்கு என்னவோ தோன்றுகிறது!" என்றான்.

"பெண் பிள்ளைகளுக்கு நகை பிடிக்காமல் இருக்குமா? வாங்கிக் கொடுத்தால் அவர்களுக்குத் திருப்திதான். என் கையிலே தம்பிடிக் காசுகூட இல்லை. இன்னொரு சமயம் வா, பார்த்துக் கொள்ளலாம்" என்றான் ரமாநாத்.

"எசமான், நீங்கள் சொல்வது வேடிக்கையாக இருக்கிறதே! உங்களிடம் காசில்லாமல் இருக்குமா? அப்படியே இல்லை என்று தான் வைத்துக் கொள்ளுங்கள், உங்களை எனக்குத் தெரியாதா? எனக்கு முடையாயிருக்கும் பொழுது வாங்கிக் கொள்ளுகிறேன்" என்று சொல்லித் தாரு வியாபாரி பெட்டியிலிருந்து இரண்டு நகைகளை எடுத்தான். ஒன்று புது விதமான கல் விழைத்த கங்கணம்; மற்றொன்று கம்மல். இரண்டுமே வெகு சேர்த்தியாயிருந்தன. 'பளபள' வென்று பிரகாசித்துக் கொண்டிருந்தன.

மணியோ அப்பொழுது பத்து அடித்து விட்டது. தயாநாத பாபு ஆபீஸுக்குப் போய்விட்டார். ரமாநாத்தும் சாப்பாட்டிற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். இதை யெல்லாம் பார்க்க அவனுக்கு அவகாசமே யில்லை. ஆனால், அந்த இரண்டு நகைகளும் அவனை அப்படியே வசீகரித்து விட்டன. அவன் எல்லாவற்றையும் அடியோடு மறந்து, அந்த நகைகளைக் கையில் வாங்கிக் கொண்டு உள்ளே சென்றான். அவன் கையில் நகைகளைப் பார்த்ததும் மாமியார், மாட்டுப் பெண் இருவரும் ஓடோடியும் வந்து நகைகளை வாங்கிப் பார்க்கலாயினர். அந்த நகைகளின் ஒளியிலும் அழகிலும் மயங்கிப்போய் அவ்விருவரும் பேசாமல் வாயடைத்து நின்றனர்.

"இந்தக் காலத்துச் சாமான்களுக்கே ஒரு தனி அழகுதான். பழைய காலத்துக் கர்நாடக நகைகள் யாருக்காவது பிடித்தால்தானே?" என்றான் ரமாநாத்.

"எனக்கு அந்தப் பழைய கர்நாடக நகைகளைப் பார்க்கவே சகிக்கவில்லை. அந்தக் காலத்துப் பொம்மனாட்டிகள் எப்படித்தான் அதை யெல்லாம் போட்டுக் கொண்டிருந்தார்களோ, தெரியவில்லை" என்றாள் பத்மா.

"அதிருக்கட்டும், இந்த இரண்டு நகைகளும் பிடித்திருக்கிறதா, இல்லையோ?" என்று ரமாநாத் புன்முறுவலுடன் கேட்டான்.

"பிடிக்காமல் என்ன? என் அம்மா, நீங்கள் வேண்டுமானால் எடுத்துக் கொள்ளுங்களேன்!" என்றாள் பத்மா.

ஜாகேசுவரி தன் மனத் துயரத்தை மறைப்பதற்காகத் தலையைக் குனிந்து கொண்டாள். குடும்பத் தொல்லையிலேயே தன் வாழ்நாளைப் பூராவும் செலவிட்ட அவளுக்கு, நகைகளைப் பற்றிச் சிந்திக்கப் பொழுதிருந்தால்தானே! அவளுடைய கணவருக்குக் கிடைத்து வந்த சம்பளமோ குழந்தை குட்டிகளைப் பராமரிக்கவும் குடும்பத்தை நடத்தவுமே போதும் போதாததாக இருந்து வந்தது. அப்படியிருக்கும் பொழுது அவள் நகைக்கு என்ன செய்வது? வீட்டுக்கு எசமானியான பிறகு, செட்டும் கட்டுமாகக் குடித்தனத்தை நடத்த வேண்டிய பொறுப்பு அவள் தலையில் விழுந்திருக்கும்பொழுது, ஆசைக்கு இடம் கொடுத்தால் கட்டி வருமா? ஆகையால் அவள் தன் மனதில் நகை ஆசை உதிக்கவே இடம் கொடுப்பதில்லை. கண்ணால் பார்த்து விட்டாலே, தனக்கும் 'நகைகள் செய்து போட்டுக் கொள்ள வேண்டும்' என்ற ஆசை ஏற்பட்டு விடுமோ என்ற பயத்தில், அவள் நகைகளை ஏறெடுத்துக் கூடப் பார்ப்பதில்லை.

"இனிமேல் எனக்கு எதற்கம்மா, நகை? நான் நகை போட்டுக்கொள்ள வேண்டிய காலம்தான் மலையேறிவிட்டதே!" என்று பத்மாவின் கேள்விக்குப் பதில் அளித்து விட்டு, "என் ரமா, இந்த நகைகளை யார் கொண்டு வந்தது? என்ன விலை சொல்லுகிறான்?" என்று விசாரித்தாள் ஜாகேசுவரி.

"ஒரு தாரு வியாபாரி கொண்டு வந்திருக்கிறான். நான் விலை கேட்கவில்லை. வாங்குவதாயிருந்தால்தானே விலை கேட்பதற்கு?" என்றான் ரமாநாத்.



"வாங்கப் போவதில்லை என்றால், இங்கே காட்டுவதற்குக் கொண்டு வருவானேன்?" என்றாள் பத்மா.

பத்மாவின் குரலில் ஒருவித ஆதாரமும் ஏளனமும் தொனிப்பதைக் கண்ட ரமாகாந்துக்கு வாய் திறந்து பேச நா எழவில்லை; வளைகளைத் திருப்பிக் கொடுத்து விடவும் தைரியம் வரவில்லை. "அப்படியானால் வாங்கி விடட்டுமா?" என்று கேட்டான்.

"அம்மாதான் ஒன்றுமே சொல்லவில்லையே! அப்படியிருக்கும்பொழுது வாங்கித்தான் என்ன செய்யப் போகிறீர்கள்?" என்றாள் பத்மா.

"என் ரமா, உடனே அவன் பணத்தைக் கொண்டு வா என்றால் என்ன செய்வது?" என்றாள் ஜாகேசவரி.

"அதைப் பற்றி உனக்கு என் கவலை? வேண்டுமென்றால் எடுத்துக் கொள்ள வேண்டும்; இல்லாவிட்டால் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். 'மசமச' வென்று ஏழு நாழிகை யோசனை பண்ணிக் கொண்டிருக்கக் கூடாது. சீக்கிரம் சொல்லுங்கள்!" என்று ரமாகாந்த் அவசரப்படுத்தினான்.

பத்மாவுக்கு ரமாகாந்தின் கண்டிப்பும் அவசரமும் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. அவன் இப்படிப் பேசுவான் என்று அவள் எண்ணவேயில்லை. 'வேண்டாம், வேண்டாம்' என்று சொல்ல வேண்டியது அவளுடைய கடமை. 'இல்லை, வாங்கிக் கொண்டுதான் ஆக வேண்டும்' என்று பலவந்தப்படுத்தி வாங்கித் தர வேண்டியது அவனுடைய கடமை' என்பது அவள் எண்ணம். ஆகவே, ஆசை ததும்பும் கண்களுடன் ஜாகேசவரியின் பக்கம் திரும்பி, "திருப்பியே கொடுத்து விடுங்கள். அப்புறம் அவன் பிடுங்கலை யார் சகிப்பது?" என்றாள் பத்மா.

ஜாகேசவரி 'ஒரு க்ஷணமாவது தன் கை பாசையைத் தீர்த்துக் கொள்ளுவோமே' என்ற எண்ணத்தில் பெட்டியில் இருந்த கங்கணத்தை எடுத்துத் தன் கையில் போட்டுக்கொண்டாள். ஆனால் அடுத்த கணமே தனது அசட்டு ஆசையைப் பற்றி

என்னி வெட்கிப்போய், அவைகளை அவசர அவசரமாகக் கழற்றலானாள். அதைக் கண்ணுற்ற ரமாகாந், "வேண்டாம், அம்மா! எதற்காகக் கழற்றுகிறாய்? போட்டுக் கொள். நான் உனக்கு வாங்கித் தந்ததாகத்தா னிருக்கட்டுமே" என்றான்.

இத்தனை காலமாகப் பூர்த்தி பெறாமலிருந்த தன் ஆசை, தனயனின் தாயன்பு காரணமாகப் பூர்த்தி பெறுவதைக் காணும் பொழுது, ஜாகேச்வரியின் கண்ணில் நீர் சுரந்தது. ஆனால் தன் அன்புக்கு அன்பான பிள்ளைமீது கடனைச் சுமத்த அவளுடைய மனம் சிறிதும் இடம் கொடுக்கவில்லை. 'என்ன இருந்தாலும் அவன் சின்னக் குழந்தைதானே! கடனைத் தீர்க்கச் சாமர்த்தியம் வேண்டாமா? இவ்வளவு பெரிய கடனைக் குழந்தை அடைக்க முடியாமல் திண்டாடினால்...?' என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் எழுந்தது. "வேண்டாம் அப்பா, நான் வெறுமனே போட்டுக் கொண்டுதான் பார்த்தேனே தவிர வேறொன்றும் இல்லை. இந்தா, திருப்பிக் கொடுத்து விடு!" என்றாள்.

தாயாரின் முகத்தில் தோய்ந்திருந்த துயரம் ரமாகாந்தின் கண்களுக்குத் தெரியாமற் போகவில்லை. ஆகையால் 'கடன் பட்டு விடுவோமே' என்ற பயத்தில் தியாகமே உருவெடுத்த தாயாரின் மனதை நோகச் செய்ய அவன் மனம் சிறிதும் இடம் கொடுக்கவில்லை. "பணத்தைப் பற்றி உனக்கு ஏன் அம்மா கவலை? நான் இருக்கிறேன்; பார்த்துக் கொள்ளுகிறேன்" என்றான்.

'ரமாகாந் பேசும் பேச்சைப் பார்த்தாயோ, இல்லையோ?' என்று கேட்பவள் போல, ஜாகேச்வரி மாட்டுப் பெண் பக்கம் திரும்பினாள்.

பத்மா, அலட்சியமாக அவர்களுடைய பேச்சையே காதில் வாங்கிக் கொள்ளாதவள்போல உட்கார்ந்திருந்தாள். 'மாட்டுப் பெண் தான் கங்கணம் போட்டுக் கொள்ளுவதை விரும்பவில்லை' என்பதை ஜாகேச்வரி அவளுடைய முகபாவத்திலிருந்தே ஊகித்தறிந்து கொண்டாள். உடனே தன் கையிலிருந்த கங்கணத்தைக் கழற்றிப் பத்மாவிடம் கொடுத்த வண்ணம், "இந்தா பத்மா, நீயே இதைப் போட்டுக் கொள். சாகப் போகிற வயதில் எனக்கு எதற்கு இந்த நகைகள்?" என்றாள்.

'மாமியாரிடத்தில் பணத்துக்குக் குறைவேயில்லை' என்பது பத்மாவின் திடமான நம்பிக்கை. ஆகவே, 'இவ்வளவு நாளும் தனக்காக இரங்காத மாமியார் இன்று தன் கைப் பணத்தைப் போட்டுத் தனக்கு நகை வாங்கித் தரப்போகிறாள்!' என்ற எண்ணத்தில் பத்மாவுக்கு, 'வேண்டாம்' என்று சொல்லிவிட மனம் வரவில்லை. இருந்தாலும் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், "அம்மா, கையில் பணம் இல்லையென்றால் எதற்கம்மா அவசரம்? மெதுவாக வாங்கிக் கொண்டால் போயிற்று!" என்றாள்.

ரமாகாந் பொறுமை யிழந்து, "இந்த வழவழாப் பேச்செல்லாம் எதற்கு? உனக்கு நகை வேண்டுமானால் எடுத்துக் கொள். பணத்தைப் பற்றி நீ கவலைப்படத் தேவையில்லை" என்றான்.

பிறகு சேசே நாகு வியாபாரியிடம் வந்து அவைகளின் விலையைக் கேட்டான். அவன் சொன்ன விலை ரமாகாந்தை ஒரே யடியாகத் தூக்கி வாரிப் போட்டது. அவன் போட்ட மதிப்போ, கங்கணத்துக்கு முந்நூறும், கம்மலுக்கு நாற்பதிலிருந்து ஐம்பதுக்குள்ளுமா யிருந்தது. நாகு வியாபாரி சொன்ன விலையோ அவனுடைய மதிப்பைக் காட்டிலும் இரு மடங்குக்குமேல் அதிகமா யிருந்தது. 'முன்னாலேயே விலையைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் அசட்டுத்தனமாக நடந்து கொண்டு விட்டோமே! கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தால், அப்பொழுதே 'வேண்டாம்' என்று சொல்லி அவனைப் போகச் சொல்லி யிருந்திருக்கலாமே! இப்பொழுது திருப்பிக் கொடுப்பதென்றால் மனம் கூசுகிறதே! என்ன செய்வது?' என்று ரமாகாந் யோசிக்கலானான்.

"இந்த விலையைக் கேட்டால் பத்மாவே 'வேண்டாம்' என்று சொன்னாலும் சொல்லி விடுவாள்!" என்ற எண்ணம் அடுத்த கணம் அவனது உள்ளத்தில் எழுந்தது. உடனே நாகனிடம், "சற்று இரு, உள்ளே போய்க் கேட்டுக்கொண்டு வருகிறேன்!" என்று சொல்லி விட்டு உள்ளே வந்து, "ஏன் அம்மா, இந்தக் கங்கணத்துக்கு என்ன கொடுக்கலாம்? சொல்லு, பார்ப்போம்" என்று தன் தாயாரைப் பார்த்துக் கேட்டான்.

ஜாகேச்வரி பதில் சொல்லத் தெரியாமல் முட்டாள் பட்டம் கட்டிக் கொள்ள விரும்பவில்லை. அவள், "கல்லிழைத்த

சாமான்களுக்கே விலை சொல்லுவது கொஞ்சம் சிரமந்தான். என்ன விலைக்குத் தீருகிறதோ, அதுவே சரி!" என்று பதில் சொன்னான்.

"ஏன் பத்மா? என்ன கொடுக்கலாம்? நீதான் ஒரு மதிப்புப் போடேன்!" என்றான் ரமாகாந்த்.

"அறுநூறுக்குக் குறையாது!" என்றாள் பத்மா.

விலையைச் சொல்லிப் பத்மாவைப் பயமுறுத்தி விடலாம் என்று அவன் நினைத்திருந்த நினைப்பில் இப்பொழுது மண் விழுந்தது. அறுநூறுக்கும் எழுநூறுக்கும் அதிக வித்தியாசம் இருந்தால்தானே! 'கிட்டத்தட்டப் போனால் நாகன் அவன் சொன்ன விலைக்கே கொடுத்தாலும் கொடுத்து விடுவான்' என்று எண்ணம் எழுந்ததும் அவன் சற்றுத் தயங்கி, "நல்ல வைரம் தானா?" என்று கேட்டான்.

"எப்படியிருந்தாலும் அறுநூறுக்குக் குறையாது."

"கம்மலுக்கு என்ன கொடுக்கலாம்?"

"அதிகபக்ஷம் நூறு ரூபாய் கொடுக்கலாம்."

"அவன் நூற்றைம்பது சொல்லுகிறானே!"

"அவன் சொன்னால் என்ன? அவன் சொன்ன விலைக்கே நாம் வாங்கிவிடப் போகிறோமா, என்ன?" என்றாள் பத்மா.

ரமாகாந்துக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. பத்மா போட்ட மதிப்புக்கும் நாகன் சொன்ன விலைக்கும் அவ்வளவாகத் தாரதம்மியம் இல்லைதானே. இருந்தாலும் தன் பொருளாதார நிலைமையை நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கும் பத்மா, இப்படி எழுநூறு ரூபாய் நகைக்கு அடி போடுகிறாளே, என்ன செய்வது?—என்று ஏங்கினான். 'அவள் தன்னை நம்பி இந்த நகைகள் வாங்கும் விஷயத்தில் முனையவில்லை' என்ற விஷயம் அவளுக்குத் தெரிந்திருந்தால்தானே! ஆகவே 'தான் இந்தச் சங்கடத்திலிருந்து தப்ப வேண்டும் என்றால், நாகன் அறுநூறு ரூபாய்க்குச் சம்மதிக்கக் கூடாது. அதைத் தவிர வேறு வழியேயில்லை!' என்ற முடிவுக்கு அவன் வந்து விட்டான்.

பிறகு, பத்மாவின் பக்கம் திரும்பி "ஆமாம், அவன் எழுநூற்றைம்பதுக்கு ஒரு தம்பிடி கூடக் குறைய மாட்டேன் என்கிறானே! என்ன செய்வது?" என்றான்.

"அப்படியானால் அவனிடமே திருப்பிக் கொடுத்து விடுங்கள்" என்றாள் பத்மா.

"திருப்பிக் கொடுப்பது என்றால் எனக்கு என்னவோ வெட்கமாயிருக்கிறது. அம்மா, நீதான் சற்று வந்து "எழுநூறுக்குக் கொடுப்பதாயிருந்தால் கொடு; இல்லாவிட்டால் வேண்டாம் என்று சொல்லிவிடேன்?" என்றான் ரமாகாந்த்.

"அம்மாவை எதற்குச் சிரமப்படுத்துகிறீர்கள்? நானே சொல்லிவிடுகிறேன்!" என்று பத்மா வாசலறைப் பக்கம் வந்தாள். ரமாகாந்தும் அவள் பின்னாலேயே மெதுவாக வந்தான்.

"ஓய் நகைக்காரரே, நீர் என்ன பகற்கொள்ளை யடிக்க வந்திருக்கிறீரா? ஏதோ கண்ணை மூடிக்கொண்டு ஒரே யடியாக விலையைச் சொல்லுகிறீராமே!" என்று தைரியமாகக் கேட்டாள் பத்மா.

"என்ன அம்மா, சொல்லுகிறீங்க?" என்று எழுந்து வந்து மிகவும் வினயத்துடன் கேட்டான் நாகு வியாபாரி.

"கங்கணத்துக்கு எழுநூறும், கம்மலுக்கு நூற்றைம்பதும் சொல்லுகிறீராமே! எந்தக் குருடனாவது அவ்வளவு ரூபாய் கொடுத்து வாங்குவானா? ஒரே விலை; எழுநூறு தருகிறேன். இஷ்டமிருந்தால் கொடும், இல்லா விட்டால் நடையைக் கட்டும்!" என்று கண்டிப்பான குரலில் பத்மா சொன்னாள்.

"அம்மா, அப்படி ஒரே யடியாகக் குறைத்து விடாதீங்க, ஐந்து, பத்தாயிருந்தால் போனால் போகிறது என்று இருந்து விடுவேன். இதில் எனக்கு அவ்வளவு ஒன்றும் லாபம் இல்லீங்க!" என்றான் வியாபாரி.

"உமக்கு இஷ்டமிருந்தால் கொடும்; இல்லாவிட்டால் எடுத்துக் கொண்டு போம் என்றுதான் சொல்லி விட்டேனே! அப்புறம் எதற்கு வீணாக வார்த்தையை வளர்த்துகிறீர்?" என்றாள் பத்மா.

வியாபாரி ஏதோ தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டு விட்டவன் போல முகத்தை வைத்துக் கொண்டு சிறிது நேரம் யோசித்தான். பிறகு, "கஷ்டம் தான். இருந்தாலும் உங்கள் சொல்லைத் தட்ட முடியாது போலிருக்கிறதே!...... ஆமாம், எப்பொழுது பணம் கொடுப்பீங்க?" என்று கேட்டான்.

"சீக்கிரமே தந்துவிடச் சொல்லுகிறேன்!" என்றாள் பத்மா.

பிறகு உள்ளே போய், "பார்த்தீர்களா, கடைசியில் எழுநூறுக்கே சம்மதித்து விட்டான். எல்லாம் நாம் பேசுகிற பேச்சிலே யிருக்கிறது. இந்த மாதிரி ஆசாமிகள் எல்லாம் ஆள் கொஞ்சம் ஏமாந்த சோணகிரியா யிருந்தால் போதும், அடித்துக் கொண்டே போய் விடுவார்கள். இப்பொழுதுதான் 'இன்னும்கூடக் கொஞ்சம் குறைத்துக் கேட்காமல் விட்டுவிட்டோமே!' என்று வருத்தமா யிருக்கிறது!" என்றாள்.

ரமாநாத்துக்கு அந்தக் கடனை ஏற்க மனமே யில்லை. இருந்தாலும் சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல் வேறு வழியின்றி அந்தக் கடன் சுமையைத் தானே ஏற்றுக் கொண்டான்.

பத்மா வெகு சந்தோஷத்துடன் இரண்டு நகைகளையும் எடுத்துக் கொண்டு மாடிக்குப் போய் விட்டாள். ரமாநாத், 'பழைய கடன் இன்னும் அடைந்த பாடில்லை என்ற விஷயம் தெரிந்திருந்தும் பத்மா இப்படிச் செய்து விட்டாளே! இந்தக் கடன் எல்லாம் எப்படித்தான் தீரப் போகிறதோ?...பார்க்கப் போனால் நாம் செய்ததுதான் அசட்டுத்தனம். இந்தத் தரகு வியாபாரியை உள்ளே வர விடாமலிருந்தால் இப்படியெல்லாம் நடந்திருக்குமா?' என்றெல்லாம் மனதைப் போட்டு உழற்றிக் கொண்டான்.

* * *

ரமாநாத் சாப்பாட்டை முடித்துக் கொண்டு ஆபீஸ் புறப்படு முன் மேலே போனான். பத்மா நிலைக் கண்ணாடிக் கெதிரில் நின்று கொண்டு காதுகளில் கம்மல் போட்டுக் கொண்டிருந்தாள். அவள் ரமாநாத்தைப் பார்த்ததும், "இன்றைக்கு யாருடைய முகத்தில் விழித்தேனோ தெரியவில்லை; இரண்டு நகைகள் இனாமாகக் கிடைத்து விட்டது!" என்றாள் வெகு சந்தோஷத்துடன்.

"இனாமாகக் கிடைத்து விட்டதா? அப்படியானால் நகைக்காரனுக்கு யார் பணம் கொடுக்கப் போகிறார்கள்?" என்று ரமாநாத் வியப்புடன் கேட்டான்.

"ஏன்? அம்மா கொடுக்கிறாள்! அவள் தானே, 'நீ போட்டுக் கொள்' என்று எனக்கு இந்த நகைகளைக் கொடுத்தாள்!"

"ஆமாம், அவள் பணம் கொடுத்து விடுவதாக உன்னிடம் சொன்னாளா?"

"அவள் சொல்லவில்லை. 'எடுத்துக் கொள்' என்று நகைகளைக் கொடுத்தாளே; அவளே பணம் கொடுத்து விடுவாளாக்கும் என்று நான்தான் எண்ணி விட்டேன்!"

"அப்படியா சமாசாரம்? அவளாவது, பணம் கொடுக்கவாவது? கொடுப்பதாயிருந்தால் நகைகள் திருட்டுப் போயிற்றே, அப்பொழுதே கொடுத்திருக்க மாட்டாளா? அவள் கையில் என்றைக்காவது பணம் இல்லாமல் இருந்ததா, என்ன?"

பத்மா சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தாள். பிறகு, "எனக்கு இதெல்லாம் தெரிந்திருந்தால் வாங்கிக் கொண்டிருந்திருப்பேனா?...... இப்பொழுதுதான் என்ன குடி கெட்டுவிட்டது? 'யாருக்காக நகை வாங்கினேனோ, அவனுக்குப் பிடிக்கவில்லையாம்' என்று சொல்லித் திருப்பிக் கொடுத்து விட்டால் போகிறது!" என்றாள்.

இதைச் சொல்லி, உடனே அவள் காதுக் கம்மலையும் கங்கணத்தையும் கழற்றிப் பெட்டிக்குள் வைத்து, ரமாநாத்தினிடம் கொடுப்பதற்காக நீட்டினாள். அவள் அதைப் பிடித்திருந்த விதம், தன் வாயில் சிக்குண்ட எலியை விடாமல் இறுகப் பிடித்துக் கொள்ளும் பூனையின் பிடிப்பைப்போல் இருந்தது! அவளுக்கு அந்த நகைகளைத் திருப்பிக் கொடுத்து விடவும் மனம் வரவில்லை; வைத்துக் கொண்டு விடவும் துணிவு ஏற்படவில்லை. இந்த 'இரண்டும் கெட்டான்' நிலைமையில் அவள் மனம் ஊசலாடியது. 'தன் பலவீனத்தை ரமாநாத் தெரிந்து கொள்ளாமல் இருக்க வேண்டுமே' என்பதற்காக அவள் தலையைக் குனிந்து கொண்டாள். 'ஒரு பெரிய தர்ம சங்கடத்தி லிருந்து தப்பப் போகிறோம்!' என்ற ஆனந்தம் அவளுக்கு லவலேசம்கூட ஏற்படவில்லை. அயல் நாடு போகும் தன் அன்புக்கு அன்பான பிள்ளைக்கு விடை கொடுத்தனுப்பும் தாயாரின் மனோபாவத்தை ஒத்திருந்தது, பத்மாவின் மனோபாவம். நகைப் பெட்டியைத் திருப்பிக் கொடுப்பதற்காகக் கையை நீட்டிய பொழுது, தாயாரின் வதனத்தில் தாண்டவமாடும் அதே ஏக்கம், அதே அச்சம், அதே அன்பு பத்மாவின் வதனத்திலும் பிரதிபலித்தது!

அவளிடமிருந்து நகைப் பெட்டியை வாங்கிக் கொண்டு விடுவதற்கு ரமாநாத்தின் நெஞ்சமும் அவ்வளவு கல்லாகி விடவில்லை. அவளுக்காகக் கடைக்காரனின் சச்சரிப்

யைச் சகித்துக் கொள்ளுவது, அவமானப் படுவது, கடன் தொல்லையில் உழலுவது முதலிய சகல கஷ்டங்களையும் அவன் பொறுத்துக் கொள்ளத் தயாரா யிருந் தான்; ஆனால் அவளுடைய மனதைப் புண்படுத்தக் கூடிய எந்தக் காரியத்தையும் அவன் செய்யத் தயாராயில்லை. ஆகையால் அவன் சிரித்துக் கொண்டே, "இருக்கட் டும், வைத்துக் கொள். வாங்கினது வாங்கி யாகி விட்டது; இனிமேல் திருப்பிக் கொடுத் தால் நன்றா யிராது. அம்மாவும் ஏதாவது நினைத்துக் கொள்ளுவாள்" என்றான்.

"எந்தக் காரியமும் நம் நிலைமைக்குத் தகுந்தவாறுதான் செய்ய வேண்டும். பிறர் ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிறார் களே என்பதற்காகச் செய்தால், நாம் தானே சிரமப்பட வேண்டும்! வேண்டாம், கொடுத்து விடுங்கள்!" என்றாள் பத்மா.

"படைத்தவன் படி அளக்காமலா போகிறான்? கவலைப்படாதே!" என்று சொல்லிவிட்டு, ரமாநாத் வெகு வேகமாகக் கீழே இறங்கி விட்டான்.

நாம் சின்னஞ் சிறு அற்ப ஆசைகளிலும் சங்கோசத்திலும் மாட்டிக் கொண்டு வாழ் வின் இன்பத்தையும் அமைதியையும் எப்படி எப்படி யெல்லாமோ குட்டிச்சுவராக்கிக் கொண்டு விடுகிறோம். பத்மா அற்ப ஆசை யில் விழுந்து மனதைப் பறி கொடுக்காமல் அடக்கி யாண்டிருந்தால், — ரமாநாத் சங் கோசத்திற்குத் தலை வணங்காம லிருந்தால் —இருவருடைய உள்ளத்திலும் தூயக் காதல் — உண்மை அன்பு சுடர் விட் டெரிந்து கொண்டிருக்கும்; இருவரும் இப்படி அழிவை நோக்கி முன் னேறிப் போய்க் கொண்டிருக்க மாட் டார்களல்லவா?

எப்படியோ இந்த நகை வியாபாரத்தில் நேரம் போனதே தெரியாமல் மணி பதி னொன்று அடித்து விட்டது. ஆபீசுக்கு நே ரமாகி விட்டது. தனது நெருங்கிய உற வினருக்குத் தகனக்கிரியை செய்துவிட்டுத் திரும்பிப் போகும் மனிதனைப் போல, ரமாநாத் ஆபீஸை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். (தொடரும்)

# காலக்ஷேபம்

### நல்ல காரணம்!

எஜமானி:—என்ன அநியாயம் இது? எனக்குத் தெரியாமல் என் கறுப்புப் புடவை யைக் கட்டிக் கொண்டு அழகு பார்த்துக் கொண்டிறாயே!

வேலைக்காரி:—கறுப்புப் புடவை எனக்கு நன்றாயில்லை, அம்மா!

★

### பேஷ்!

ஒரு பையன் சரித்திரப் பாடத்துக்கு ஒரு வாரம் வராமலிருந்தான். அவன் கடைசி யாகப் பள்ளிக்கூடத்துக்கு வந்த போது கஜினி முகம்மது படையெடுப்பைப் பற்றிய பாடம் நடந்தது.

உபாத்தியாயர்:—நீ ஊருக்கு எப்போது போனாய்?

மாணவன்:—முகம்மது கஜினி பன்னிரண் டாம் முறை படை யெடுத்து வந்தபோது!

★

### தைரியசாலி!

ஒரு வீட்டில் திருடன் புகுந்து விட்டான். சத்தம் கேட்ட கணவன் திடுக்கிட்டுப் படுக் கையை விட்டு எழுந்து கதவிருந்த பக்கம் ஓடினான்.

மனைவி:—ஐயோ! நீங்கள் தனியே போகா தீர்கள்!

கணவன்:—பயப்படாதே! கதவைத் தாழ்ப் பாள் போட்டு விட்டு வந்து விடுகிறேன்!

### போனது எது?

வைத்தியர்:—நான் சொன்னபடி படுக்கை அறைக் கதவைத் திறந்து வைத்துப் படுத் துக் கொண்டாயா?

நோயாளி:—படுத்துக் கொண்டேன்.

வைத்தியர்:—அப்படியானால் தலைவலி போயிருக்குமே!

நோயாளி:—தலைவலி போகவில்லை; என் மேஜையிலிருந்த கடிகாரந்தான் போய் விட்டது!

★

### அநுபவ ஞானம்

நாவல் ஆசிரியர்:—என் நாவலைப் படித்துப் பார்த்தீர்களா?

வாசகர்:—கதை அநுபவ ஞானத்துக்கு ஒத்ததாயில்லை. முதல் அத்தியாயத்தில் வரும் வேலையாள் இரண்டு வருஷங்களுக்குப் பிறகும் எட்டாவது அத்தியாயத்தில் அந்த வீட்டில் வேலை செய்வதாகச் சொல்லியிருக்கிறது!

★

### நல்ல வியாபாரம்

"ஏது, புது கடிகாரம் போலிருக்கிறதே!"

"ஆமாம்!"

"என்ன விலைக்கு வாங்கினாய்?"

"விலை தெரியவில்லை. நான் அதை எடுத்து வந்த சமயத்தில் கடையில் யாரும் இல்லை."






லோத்ரா பல்லாண்டுகளாக இந்திய ஸ்திரீகளுக்கு விசுவாசத்துடன் சேவை புரிந்து நம்பிக்கையுள்ள கர்ப்பாசய ரோக நிவாரணி என்று புகழையும் ஸ்தாபித்துக் கொண்டுள்ளது.

லோத்ரா கவர்ச்சி மிக்க ஆரோக்கியத்தையும் சக்தியையும் அளிக்கிறது.

## கேஸரி குடீரம் லிமிடெட்
## மதராஸ்

ஒரிஸ்ஸா, நிஜாம் ஸமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ் நாடு, முதலிய இடங்களுக்கு

ஏஜண்டுகள்:

**சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்**

பேர்ஹாம்பூர் - செகந்திராபாத்

பெஜவாடா - மதுரை

## கோகுல்

சந்ததி தைலம்

அரைக்கீரை விதைத் தைலம்

கூந்தல் தைலம்





எங்கள் தயாரிப்புகள் ஒவ்வொன்றிலும் கோகுல் ட்ரேட் மார்க் இருப்பதை கவனியுங்கள்.

## டி.எஸ்.ஆர் & கோ
## கும்பகோணம்.

மதராஸ் ஏஜண்டு:

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைகிராப்ட்ஸ் ரோடு,

திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு:

B. பாலபட்டாபி,

வைசியாள் தெரு, கோயமுத்தூர்

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும் போது ஏற்படும் வயிற்றுப் போக்கு முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த டானிக்.

**பேபி கிரைப்**

மிகச் சிறந்த ரத்த சுத்தி மருந்து

இது தேகத்தின் உஷ்ணம் அதிகரித்து அதனால் ஏற்படும் ரோகங்களை குணப்படுத்தி, தேகத்திற்கு ஆரோக்கியத்தை கொடுக்கும். ரத்தத்தை சுத்தி செய்து ரத்த விருத்தியையும் உண்டாக்கும்

**அயோடிசால்**

IODISAL The best BLOOD PURIFIER

முகப்பரு, சேற்றுப் புண், சொறி, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்கும் கைகண்ட

— மருந்து —

**சைபால்**

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள்:
**தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி**
மதுரை

ஏஜண்டுகள்:—ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், தணியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3; சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா, பெத்தாம்பூர் & செகந்தராபாத்; ஸ்ரீ ஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி.

சிலோன் ஏஜண்டுகள்:—M. O. A. கனி & கோ., 96, சதாம்ஸ் ரோடு, கோட்டை, கொழும்பு

## தாமதியாதீர்கள் !



# பிஸ்மாக் BISMAG

## உட்கொள்ளுங்கள் !

நல்ல சாப்பாட்டுக்குப் பிறகு, இன்னும் நீங்கள் வேலைசெய்ய வேண்டியிருந்தால்—பிஸ்மாக் (பைஸ-ரேடட் மக்னீஷியா) உட்கொள்ளுங்கள். மிகச் சுலபமானதும் அஜீரணம், வயிற்றுப் பொருமல், வயிற்று மந்தம் இன்னும் சகலவித வயிற்றுக் கோளாறுகளுக்கும் இன்றியமையாதது.

போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்! பிஸ்மாக் உட்கொண்டு நல்ல ஜீரண சக்தி அடையுங்கள்.




மாத்திரையாகவும் பௌடராகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

Sole Distributors in India:
Geoffrey Manners & Co., Limited
BOMBAY, CALCUTTA, MADRAS and LAHORE

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள்:
**ஜியோப்ரே மானர்ஸ் & கம்பெனி லிமிடெட்**
பம்பாய், கல்கத்தா, சென்னை, லாகூர்

# ஈரல் குலை
## கட்டிவியாதிகள்
## குணப்படுத்த முடியும்

கீழ்கண்ட அறிகுறிகள் சந்தேகிக்க
கூடியவை

ஆரம்பத்திலேயே ஜாக்கிரதை
வேண்டும்

# ஜம்மியின் லிவர்க்யூர்

குழந்தையின் ஈரல் குலைக்கட்டுக்கு ஜம்மியின் லிவர்க்யூர் உபயோகியுங்கள். எல்லா இடங்களிலும் விற்கப்படுகின்றன.

விவரங்களுக்கு :

ஜம்மி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்

லிவர்க்யூர் க்ளினிக் & ஆபீஸ் :

மயிலாப்பூர் :: மதராஸ்

அல்லது

பெரிய தெரு, கும்பகோணம்

அல்லது

தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி

அல்லது

ஆற்காடு ஸ்ரீனிவாசாச்சாரி தெரு, பெங்களூர் ஸிடி

அல்லது

பம்பாய் ஆபீஸ் :

பயிரக் மான்ஷன், சாண்டர்ஸ்ட் ரோடு வெஸ்ட், பம்பாய் - 4

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

# அஜீரணத்தினாலும் மலச் சிக்கலினாலும்
## வேதனை இருந்துகொண்டிருக்கும்

**பத்துக் குழந்தைகள் பெற்ற அம்மையார் ஒரு சிறு அளவாகிலும் க்ரூஷன் சாப்பிட ஸிலாகிக்கிறார்**

அஜீரணம், தலைவலி, மலச் சிக்கல் ஆகிய உபாதைகள்—பத்துக் குழந்தைகளைப் பெற்ற அந்த அம்மையாருக்கு ஒரு பாரமாக இருந்து வந்தன. தயக்கமற்று சந்தோஷமாக ஒரு சிறிய அளவாகிலும் க்ரூஷன் சாப்பிடும் வழக்கத்தை மேற்கொண்டாள். பத்து வருஷங்களுக்கு "ஒரு சிறு அளவாகிலும்" தொடர்ந்து க்ரூஷன் சாப்பிட்டு அவள் அடைந்த நன்மையைப் பற்றி பின்வரும் கடிதத்தில் கூறுகிறார் :—

"க்ரூஷன் சால்ட்ஸை பத்து வருஷங்களாக உட்கொண்டு வருகிறேன். அது இல்லாது முடியவே முடியாது. வாயு வலிப்பு, தலை வலி, மலச்சிக்கல் ஆகியவற்றால் பெரிதும் துன்பமடைவதுண்டு. அதி சீக்கிரம் க்ரூஷன் சாப்பிட விரும்பினேன். தற்போது எனக்கு வயது 46—பத்து குழந்தைகள் இருக்கின்றன. நான் க்ரூஷனுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். இப்போது தலைவலி, மலச்சிக்கல் போன்ற தொந்தரவுகளில்லாமல் பூரண சௌக்யத்துடனிருக்கிறேன்."—(மிஸஸ்) வி.ஜெ. கோவென்ட்ரி

அஜீரணக் கோளாறுகளெல்லாம் க்ரூஷனைக் கண்டதும் சுத்தமாக மறைந்தது எப்படி என்று கேட்பது நியாயம் தான். அந்த ரகசியம் வெளிப்படையானதுதான். பரிசீலனை செய்து பார்த்ததில் க்ரூஷனில் மகவும் சத்துள்ள ஆறு உப்புத் தாதுக்களிருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டது. அதுதான் இரகசியம். மேற்படி ஆறு தாதுக்களில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு குணமுண்டு. ஒரு தாது ஓரிடத்தில் சக்தியற்றுப் போனால்—அந்த சமயத்தில் மற்றொன்று அதற்கு ஈடு கொடுக்கும். ஈரல், குடல், மூத்திர கோசம் மற்றும் ஜீரண இந்திரியங்களும் சரிவர வேலை செய்ய உதவுகிறது.

ஒவ்வொரு கெமிஸ்ட்டிடமும் வியாபாரிகளிடமும்—க்ரூஷன் பாட்டில் ஒன்றுக்கு ரூ. 1-10-0 விதம் கிடைக்கும். நீங்களும் பிரதி தினமும் சிறிய அளவில் க்ரூஷன் சாப்பிடுங்களேன்!

BC-3

# உலகில் மிகச் சிறந்த பௌண்டன் பேனா

ஏனென்றால் எல்லா சீதோஷ்ண ஸ்திதியிலும் தன்மையை இழக்காமலிருக்க விசேஷமாக ப்ளாட்டினம் தோய்க்கப்பட்டிருக்கிறது—உறுதிக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறது.

ஏனென்றால், உலகத்தின் கோடிக் கணக்கானவர்களுக்கு இருபத்தைந்து வருஷங்களாக ப்ளாட்டினத்தின் மேலே ஒரு விசேஷ மோஸ்தர் ஏற்பட்டிருக்கிறது.

ஏனென்றால், கெடுவதற்கு ஆதாரமே இல்லாமல், எந்த விதமான மசியிலும் நன்றாக எழுதக் கூடியது.

ஏனென்றால், இந்த ஏற்றமான விலையிலும் உலகில் அதிகமாக வாங்கி வழங்கப்படுகிறது.




**GOLDEN**

# Platignum

## கோல்டன் ப்ளாட்டினம்

இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்டது

வியாபார நிபந்தனைகளுக்கு கீழ்க்கண்ட பூரண உரிமையாளர்களுக்கு எழுதவும் :

**முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்**

குவீன்ஸ் மான்ஷன்ஸ்
பாஸ்டியன் ரோடு, பம்பாய்

Ad. No. PI-R

பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

5,00,000 நூற்கும் கதிர்கள். நம்பர் 80 வரை நூல்கள்.

எங்களுடைய விசேஷமான நூல்கள்: ஒற்றை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

நாங்கள் சப்ளை செய்வது: கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காசிக்கல் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக் கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சல்ல நூல்கள் எங்கள் ஏற்றிய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப் போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை. ஐக்கிய மாகாண சர்க்கார் தங்கள் அறிக்கையில், இந்தியாவிலே நூற்கப்படும் நூல்களில் எங்கள் நூல்கள் மிருதுத் தன்மைக்கும் சன்னத்திற்கும் நேர்த்திக்கும், அழுத்தத்திற்கும் மிகச் சிறந்தவை யென்றும், எல்லா நெசவுத் தொழிலாளர்களும் விரும்புவதாகவும் கூறுகிறார்கள்.

தற்போது நூல் விநியோகம் கட்டுப்பாடு செய்யப்பட்டுள்ளதால், நூல் தேவையானவர்கள் தங்கள் மாகாணம் அல்லது சமஸ்தான டெக்ஸ்டைல் கண்ட்ரோல் அதிகாரிகளுக்கு விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

மானேஜர்கள்: ஏ. & எப். ஹார்வி லிமிடெட்.



# தி இந்தியன் பாங்க் லிமிடெட்

**தலைமை ஆபீஸ்:** ''இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்'' வடக்கு பீச் ரோடு, மதராஸ்

**லோகல் ஆபீஸ்கள்:** எஸ்பினேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.



| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 53,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 60,72,602 |



சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர், செக்ரடரி

REGD. NO. M. 4392

License No. 18
Licensed to post without prepayment

# ராஜா ஸ்னோ

ஹேர் ஆயில். சோப்




murli

MANYAM & CO.,
MADRAS & BANGALORE.

பம்பாய் ஆபீஸ்: 142, ஓல்டு மோடி ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ். துரை. அருள் & கோ., லிட்., 93, கெய்ஸர் தெரு, கொழும்பு